உ

பரமபதி துணை.

பூசாரிகள் குறிசொல்லுகிற

பெரிய

# கோடாங்கிமாலை

இஃது

மதுரையைச்சேர்ந்த உத்தங்குடி கிராமம்

## தி. பொன்னுச்சாமிபிள்ளை

அவர்கள் இயற்றியது.

சுத்தப்  பதிப்பு:

மதுரை, புதுமண்டபம் புத்தகஷாப்

இ. ராம.

## குருசாமிக்கோனர்

அவர்களாற் றமது

மதுரை வடக்குமாசிவீதி:

ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

---

இதன் விலை அணா 5.

றன்றும்] 1916 [பதிப்பு



உ

பரமபதி துணை.

# பூசாரிகளுக்கு வேண்டிய
# கோடாங்கிமாலை.



## கடவுள் வணக்கம்.

ஆதிக்கணபதியே அருட்சேர்பாஞ்சுடரே
சோதிசிவஞான சுந்தரியேவாக்கருள்வாய்

தீராவினைதீர்க்குந் திருப்பரங்குன்றுதிபனே
மாறுதெனக்கு வாக்கருளவேணுமையா

தெய்வப்பிடிமணந்த தேவேயுமையீன்ற
சைவக்கொழுந்தே சடாட்சரமே அய்யாவா

மின்னிரவிபற்றகர்த்து வெய்யசுரர்கையறுத்து
தன்னையிகழ்தக்கன் தலையறுத்துப் பின்னரயன்

வாள்விபுதரோடுபொன்ற மால்புரமிட்டோடவுந்தி
வேள்விதனையழித்த வீரபத்திராவாவா

முத்தலைவேலேந்தி முடுவர்படைநெருங்க
மைத்துரங்கமூரும் வைரவாவாவாவா

ஆரியப்பூமாலைக் கருங்கழுவிலேறிநின்ற
பாரியகர்த்தய்யாவே பட்சமுடன்வாவாவா

கள்ளுடன்சாராயங் கலந்துகுடித்தேப்பமிட்டு
தள்ளாரவூர்காக்குஞ் சமயணனேவாவாவா

ஆபத்துவேளைதனி லஞ்சலென்றுவந்துமனச்
சோபத்தைத்தீர்க்குஞ் சுடலைமுத்துவாவாவா

ஆர்த்தபெரும்பூதமெல்லா மஞ்சிப்பதுங்கவரு
மூர்த்தன்யமுத்து முனியாண்டிவாவாவா

ஓசைவிளங்கி யுலகந்தனில்வழங்கும்
பஷைபதினெட்டாம் படிக்கருப்பாவாவாவா

உருமக்கருப்பாயென் னுள்ளத்தில்மேவுகின்ற
அருமைப்பெரியகருப் பையாநீவாவாவா

கத்திரிக்காய்ச்சித்தா கழுவடிமுத்தையாவென்
சத்துருவைக்காய்ந்த சடையாண்டிவாவாவா

## இருளாயி அம்மனை வரவழைத்தல்.

மட்டஞ்சிறசாம் மதலைப்பிராயம் வணங்காமுடிநாடு
கொச்சிவளநாடு முத்துயிருளாயி குடியிருப்போகீழ்நாடு
ஆதிகிழக்குமறவர்பதிக்கு அதிமறவர்சீமையிது
சின்னமறவர் எனைப்பெத்தஇருளி சிவகெங்கைப்பூமியிலே
பெரியமறவர் எனையீன்றஇருளே பேர்போனநன்னாடு
மங்களநாடு இருளாயித்தாயே மறவர்பதிச்சீமைவிட்டு
மாலைகுலுங்க முத்திருளாயி மணிமாலைநின்றசைய
ஒருகையிற்பிள்ளைகளும்எனைப்பெத்தஇருளுஒருகையில்மைந்தனொன்
கக்கத்தில்பிள்ளையொன்றும் மார்பிற்கனகரத்தினமாலையொன்றும்[றும்
பதினாறுமக்களும் எனைப்பெத்தஇருளு பாலுக்கு நின்றழுக
அழுதபிள்ளை தானமத்தும் அருங்கிளியேநல்லாளே
ஆற்றைக்கிராய்வளைத்துஎனைப்பெத்தஇருளேஅக்கரையைக்கோட்டைகட்டி
சுத்திக்கிராய்வளைத்துஇலைகுலுங்காநேரமதில் சூரியொன்றுகைவாங்கி
குட்டிகிடைக்கவில்லை யென்றுஇருளு குறம்பாடிநிற்கையிலே
ஒருத்திக்கொருமகளாம் ஒன்பதுமாதங்கெர்ப்பமதி
வயிற்றிலிருந்தகெர்ப்பம்ஆதிமறவர் வாங்கினாப்போது
பிள்ளைக்குக்கறிசமைத்துஇருவத்தொருவருக்கும்போடுமந்தவேளையிலே
அதிலும்ஓர்பிள்ளைக்கு கறியோ அகப்படவில்லையென்று
குலவையிடும்வேளையிலே முத்திருளாயி குத்தினாள்குலாடு
மனமோயிரங்கலையோ பாட்டனாண்ட மறத்திவரக்கூடாதா
ஏவற்பெருளே எனைக்குடிகொண்ட யிளமறத்திவாவாவா
பாரமறத்திஎன்னைக்குடிகொண்டபழிகாரமுத்திருளி
மறவருடசீமைவிட்டு என்னாச்சியிருளு வந்துவெளிபாராயோ
பட்டுநிலம்புரளும் எனைப்பெற்றஇருளு பாடகக்கால்ஜோதியின்னும்
ஆடைகொடியிலேயாம் என்னாச்சியிருளுக்கு ஆபரணம்பெட்டியிலே
சேலைகொடியிலேயாம் என்னாச்சிக்கு செல்லநகைபெட்டியிலே
மூக்குத்திசிந்தாக்கு எனைப்பெற்றஇருளுக்கு முன்கையிற்பூங்காப்பு
வந்தெதன்கலிதீர பாலன்றனக்குவரமுமிகக்கொடுப்பாய்

## இருளப்பசுவாமியை வரவழைத்தல்.

மாசிக்களரியும் வருகும்யிளம்பிறையில்
பாரிவேட்டைக்காலம் எனைப்பெற்றஇருளன் பதினைந்துநாழிகையில்
ஈரசந்திவேளை சத்தசாகரமூர்த்தி இ நட்கவிந்தவேளையிலே
கட்டினார்லங்கோடு கையிற்றிருவோடு
கம்பியினாலிழைத்த செம்புக்கடுக்கன்காதில்
புலியும்புலித்தோலாம் புள்ளிடானாசனமாம்
மார்புரளப்பூணூலும் சத்தசாகரமூர்த்திக்குமடிநிறைந்தவெள்ளோடும்
இரணகளப்பூமியிலே எனையாண்டஇருளன் இ நந்துதவஞ்செய்கையி
தெற்கேவிழுந்தசடை எனையாண்டிருளுக்குசிவகாமிபூசைசெய்ய[லே
வடக்கேவிழுந்தசடை சத்தசாகரமூர்த்திக்குவடகாசிபூசைசெய்ய
மேற்கேவிழுந்தசடை இருளப்பமூர்த்திக்கு மேலுலகோர்பூசைசெய்ய
அஞ்செழுத்துமந்திரமும் இருளன்குடிகொண்ட அன்பத்தோரட்சரமு
முக்கோணச்சக்கரமும் சத்தசாகரமூர்த்திமுன்னேதான்பூசையிட[ம்
பூசையிட்டுத்தானிருக்கஎனையாண்டஇருளன் புதைகுளியாம்பூக்குட
ஒத்தமுகமும்: சத்தசாகரமூர்த்திக்குஒருகுடலைப்பூவுகளும் [லை
மல்லிகைமுல்லை மலர்ந்தஇருவாக்ஷிமருக்கொழுந்துசெண்பகமும்
பிச்சிமலரெடுத்து இருளப்பமூர்த்திக்குஉச்சிச்சடைதான்வகுந்து
சடைக்கொருலிங்கம்'தவசுபண்ணும்வேளையிலே
தவசோமுடியலையா ஆதிகிழவனாண்ட தாய்க்கிழவாமுத்திருளே
செத்தயிடந்தேடி ஜெபம்பண்ணும்வேளையிலே
மாண்டயிடந்தேடி யெனைப்பெத்தயிருளன் மகாபூசைசெய்தாலும்
பூசைமுடிந்தது புதைகுளிவிட்டுப் பூக்குடலைதான்தூக்கி
அஞ்சுமுகமும் ஆதிகிழவன்மார்பிற் கொஞ்சிவிளையாடையிலே
குடலைக்கோமோசமென்று எனைப்பெத்தஇருளு கோபமதாகவேதான்
பாண்டியன்கேணிபள்ளத்தெருவில் பவனிவரும்வேளையிலே
பாண்டிமுனிவன்வந்து இருளன்கப்பரையை பங்கமதுசெய்கையிலே
அபயமபயமென்று அர்த்தசாமவேளை அலறுமந்தவேளையிலே
இடதுபுரம்பொன்குடலை வலதுபுரம்மார்நாடு
வாதாடிவாதடி யெனைப்பெத்தகருப்பு வாங்கினார்பூக்குடலை
வட்டோடுஜாங்கவந்த பள்ளிவளர்த்த பரியலையாமார்நாடு
மனமோயிரங்கலையோ கோடாங்கிக்காரர் வைத்தாண்டமுத்திருளா.

## தேவதைகளை வரவழைத்தல்

தொட்டியத்துச்சின்னு துரைமதுரவீரபொன்
மட்டுக்கடங்கா வரிப்புலியேவாவாவா
ஆதிகம்பையாற்றி லருந்தவசு செய்துநிற்குஞ்
சோதிகாமாட்சிசிவ சுந்தரியேவாவாவா
அங்காளதேவியெனை யாண்டுகொண்டசோதியருள்
மங்காதஞான மணிவிளக்கேவாவாவா
வாக்குக்கொடுத்தவளே மாதுசக்கதேவிமுத்து
ராக்குமுத்துப்பேச்சி ரணவீரிவாவாவா
பாவாடைக்காரி படுநெருப்பில் பாய்ந்தவளே
பூவாடைக்காரி பூரணியேவாவாவா
வல்லைக்கடாவும் வடபத்திரகாளிதுர்க்கை
எல்லைப்பிடாரி யிருளாயிவாவாவா
உய்யும்வழியை யுகந்தெனக்குத்தானருளும்
வையம்பட்டிச்சடைச்சி வாக்குதவவாவாவா
குறிமுகத்தில்நின்றெனையாட் கொண்டுவழிகாட்டி
அறிவுருந்துமாசாணத் தையாவெழுந்திரியே
ஏர்க்குஞ்சபையோ ரிகழாமலித்தருணம்
வாக்குதவுமாசாண வள்ளலேவந்திடுவாய்
தீட்டுடையானென்றெண்ணித் தெய்வங்காணீவிரெனை
காட்டி யெல்லைவிட்டுக் கடவாமல்காத்தருள்வீர்

கோவிந்தா அரிகோவிந்தா

ஆண்டானுதவியினு லடியேனருகிருக்க
ஏண்டாமயங்குகிறுய் இடையன்மகன்கத்தாதே
தேவரோமானிடரோ திண்ணியநாற்காலினமோ
தாவிவரும்புல்லோநற் றுவரமோவேறளதோ
ஊர்ந்துதிரிவனவோ வுந்திநீர்வாழ்வனவோ
சோர்ந்தவுடையோ நகைகயோ சொற்பனப்பணிதிகளோ
சோரங்களேதுமுண்டோ தோன்றல்பிறவாக்குறையோ
காரங்கொள்மாற்றூர் கலகமோயானறியேன்
கன்மவினைப்பயனோ கண்ணேறோநாவேறோ
முன்னவர்கள்திட்டு முறைப்பாடோயென்னுசான்

ஊரார்குளப்பமுண்டோ உற்றபொருள் சேதமுண்டோ
பாராளும்வேந்தர் பகைவலியோ வாக்கருள்வாய்
தெய்வக்குறைகளுண்டே செய்வினைகளேதுளதோ
மெய்யின்னதென்று விளம்புகிறேனஞ்சாதே

அரிகிருஷ்ண அரிகிருஷ்ண

## இதுசமயம் அறிவுமயங்கி குறிசொல்லுதல்



வதைத்தகுறிக்கு வழக்குண்டோ கேளாசன்
சித்தமறியச் செப்புவேன் தீர்மானம்
காடுசெடியுங் கமழுகின்ற சோலைகளும்
மாடுகளையோட்டி மலைமீதுசென்றேனன்
மலையிற்பசுமேய்ந்து வருகும்வழிதனிலே
மலைமீதொருகுரங்கு வழிபார்த்துத்தானிருக்க
அடவிதனில்தண்ணீரருந்துகின்றவேளையிலே
மடுவிலேவாயைவைத்து மால்கடிக்கக்கண்டேனன்
சொன்னகுறியுனக்குத் தோணலையாயின்னேரம்
மன்னனுரைத்த வார்த்தை தெரியலையா
மலையில்நல்லபூசைவகையாகவேநடத்தி
தலைமையாய்த்தானிருந்து தழுகைநடத்தையிலே
அந்தரத்தில்சத்தம் அதிர்ச்சியுடன்கேழ்க்க
விந்தையதானவெளிச்சமொன்றுகண்டேனன்
அனந்தசயனத்திலருட்கண் துயிலையிலே
மனந்தனில்வெவ்வேறாய் வாய்புலம்பக்கண்டேனன்
பத்துமாதஞ்சுமந்த பச்சைக்குழந்தைதனை
பெத்துவளர்த்துப் பிரபலமாய்வைத்திருந்தேன்
தாய்தனைத்தேடி தம்குழந்தைவந்ததுபோல்
மாயமுடன்சொர்ப்பனத்தில் வந்துவிடக்கண்டேனன்
பூசைமயானத்தில் போட்டுமுடிக்கையிலே
ஓசையுடன்பெண்கொடியா ளுடன்வரவுங்கண்டேனன்
தெரியவேசொன்ன தீர்மானந்தோணலையா
அரியஉரைத்த ததுவிபரஞ்சொல்லுகிறேன்
இல்லடம்பூமி யிருப்பாகுமத்தலத்தில்
நல்லதினத்தில் நாம்புகுந்துபார்ப்போமென்று
வட்டாரஞ்சூழ்ந்த மனையில்நுழைந்தேனன்

திட்டமுடனங்கோர் திரங்கண்டேனோர்வசனம்
அரவினுடவாயி.லகப்பட்டபாவனைபோல்
விரவிலொருமாது மெய்சோரப்பார்த்தேனுன்
மணவரையின்பந்தலிலே மாப்பிளையுபெண்ணுமொரு
குணமாய்மணம்புரிந்து கூடிவாழ்நாளையிலே
இணைபிடித்தபாவனைபோல் கிடுகிடெனும்போதினிலே
மணமாலைசெய்தமாப்பிளையைக்கோரிவந்தாய்
கோறினதுந்தெய்வம் குறித்ததுவுமானிடமே
தேறிவருவமென்று திடங்கேழ்க்கவந்தாய்நீ
சொல்லும்வழக்குத்தோணலையாயென்னுசான்
அல்லவென்றால்தள்ளிவிடு ஆசான்மகன்சொல்லுகிறேன்
மற்றதிருக்கட்டும் மயங்காதேயென்னுசான்
உற்றதின்னதென்று உரைக்கிறேன்கத்தாதே
சிவன்பிடமுறுதி சேர்ந்தமனைசேத்திரமொடு
பூவில்வழங்கும் பொருளாகுமோர்வசனம்
தாவரமேயாகுமென்றுதான்சொல்வர்நம்பாதே
பூவில்வழங்கும் பொருளாகு மென்னுசான்
கம்மாளன்செய்யுங் கனத்தபணியாமெனவும்
சும்மாநானுன்மனதைச் சோதித்தறிந்தேனுன்
நாலுகால்சாதி நடமாடுஞ்சீவனென்று
ஞாலமறிய நானுரைக்கவில்லையையா
ஆடவனேயாகுமென்று ஆசானுரைத்தசொல்லை
நாடியொருபொழுதும் நானினைக்கவில்லையடா

---

## இந்தச்சமயம் 'ஆக்கிரயத்துடன் சாமிவந்திருக்கும்.

---

இல்லையப்பாசொல்லவொட்டாதென்னைமருட்டியிங்கோர்
பில்லிப்பேயூடே பிரட்டுதப்பா அப்பேயை
ஆட்டிவைத்துஓட்டிக்கொள்வே னப்புரமாகட்டுமிந்த
நீட்டுக்குறியின் நிரம்சொல்வேனென்னுசான்
நின்றென்குறிமுகத்தில் நேர்ந்துகுறிவைத்தவநீ

அன்றேநெருங்கி அருகினில்வாயென்ஞசான்
பொன்ஞனசிந்தையினிற் பூரித்துவைத்தகுறி
சொன்ஞலெனக்குவளை சூட்டுவையாயென்ஞசான்
நல்லவடையாளமொன்று நல்குவையாநானுமதைச்
சொல்லவாசொல்லவா சொல்லென்றுல்சொல்லுகிறேன்
கன்னியடாகன்னியடா சைநிறைந்தமாணிக்கம்
அன்னியரென்றெண்ணி அச்சம்நினையாதே
சொந்தமடாயென்ஞசான் சுகமில்லையென்றவந்தாய்
அந்தவழிக்கு அரியஉரைக்குகிறேன்
தேகத்திற்பீடையன்னஞ் செல்லாதருவருப்பு
மார்கஸ்தியான வயிற்றுவலியென்ஞசான்
அச்சந்திகிலும் அதிரடியுஞ்சொற்பனமும்
மச்சவிழிசித்திரையில் வாய்புலப்பமின்னமுங்கேள்
முந்தாநாளெல்லி முதற்சாமவேளையினிற்
தொந்தரவதானவிவள் சொற்பனத்தில்வந்ததப்பா
சூலமிட்டகாளையொன்று துள்ளிவெடிவால்முருக்கி
ஞாலம்நடுங்க நமன்போலேமேல்விழுந்து
மோதியதன்கொம்பால் முடுகிமிகப்பாயவிந்த
மாதுநடுக்கிட்டு வாய்குளறிப்பேதலித்து
உடனேமறந்துவிட்டா ளுண்மைநீர்கேட்டாக்கால்
மடவார்க்குத்தோன்று மயக்கமிதுவென்ஞசான்
ஆசான்நான்சொல்வதுவும் அருத்தமிகத்தோணலையா
வாசலினிலந்த மாதுபயந்ததையும்
நாட்டுப்பிணியோ நவக்கிரகதோஷமிதோ
கோட்டிப்பேய்செய்யுங் கோட்டாலையோவென்றேதான்
கேட்டறிந்துகொள்வோமென்று கிலேசமதிகரித்து
வாட்டமுற்றுவந்த வகைசொல்வேனஞ்சாதே

---

## குறிகேட்பவர்களைப் பார்த்து ஆக்கிரமத்துடன் சொல்லுதல்.



அட்டாளதேச மடங்கச்சிறைபிடித்து
தொட்டாற்பொன்னஞ்சு தொகையேற்றுமின்னமுங்கேள்
ஈற்றுக்காணிக்கைக் கிரண்டு பணஞ்சூதகமீ

ஊற்றுக்காணிக்கைக் கொருபணமாய்வாங்கியிப்போ
கப்பமிடவெற்றிக் கருப்பன் கருப்பனென்றே
செப்பமுடனுணை செலுத்திவந்தேனிப்போது
பிறங்குமெனதுபெயர் சொன்னாலுங்காகங்
கறந்தபாலுண்ணாது கண்டறிவாயென்னுசான்
போனவருடத்திற் புதுமைத்தினத்திலிவள்
தானுமுருமத்திற் றனியாகத்தானிவளும்
கொஞ்சநகையணிந்து கோடிப்புடவைகட்டி
மஞ்சள்குளித்து மலர்மிகவுந்தான்சூடி
செங்கைவளைமின்னச் சிலம்புபுலம்பவிரு
கொங்கையசைபக் குடமெடுத்துவந்துகங்கை
கரையோரமாயென் கடியநிலைதனக்கு
வரலாமாசொல்விந்த மங்கையரையப்போது
அன்றேயோட்ட அறைநவெழுந்தேன்மதுரை
குன்றைநிகருமொட்டைக் கோபுரத்தான் மன்ருடி
இருகையுந்தான்பிடித்து யென்பிள்ளையென்றுசொல்லி
ஒருவாறுகெஞ்சி யுரைத்துமெனையப்போ
வேண்டினதுனுலுமுயிர் வேதனைசெய்யாதுவிட்டு
தூண்டியிந்தமாதைத் தொடர்ந்தேகாவென்னுசான்
மங்கைக்குவந்த வருத்தமறியாமலுநீ
பங்கப்பாறுற்று பலவிதமின்னுள் வரையில்
பண்டிதனைத்தேடிப் பணச்செலவினுல்மருந்து
கொண்டதிலுமென்ன குணமாச்சோயென்னுசான்
சொற்றகருப்பனுட கோட்டாலைபல்லாது
மற்றொன்றுமில்லை மயங்காதேயென்னுசான்
காவெனக்குநல்கக் கருங்கச்சைகையரிவாள்
கூவும்பறவைபத்துக் கோழிமுட்டைதன்னுடனே
கள்ளுடன்சாராயங் கருவாடுமாமிசமும்
உள்ளபணம்பத்தோ டொன்றேகாலுங்கொடுத்து
பூசைமயானத்திற் பொழுதஸ்தமானபின்பு
ஆசரணையாக அனுஷ்டித்தாயெந்தனுக்கு
நல்லனவாய்நீயு நடந்துகொண்டால் நானுமிந்த
மெல்லியலைவிட்டு விலகுவேனென்னுசான்

## குழந்தைவேணுமென்றவர்களுக்குச்சொல்லுதல்.



மாதமொருபூவென மரத்திலேபூப்பதுண்டு
சாதனையாகத் தான்வாசமில்லாமல்
போவதுண்டாவென்று போய்ப்பார்த்தேனென்னுசான்
ஆவதுதானென்று அறைவேனிசமாக
தாளைமலர்பூத்துத் தான்காயில்லாதிருக்கும்
வாழைக்குக் கீழ்க்கண்ணு வந்துமுளைத்திருக்கும்
சித்தமதிலின்னமுமோர் செல்வனில்லையென்றுவிம்மி
மெத்தவுமென்மீதில் விசனமுற்றாயிப்போது
இப்பிறைபோனாலு மினிமேல்வருகிறமா
தப்பிறையைக்கட்டித் தருகிறேனென்னுசான்
அதுவேகுளியாக அருந்திங்கள் பத்துமுற்று
சுதனைப்பெறுவாள் சுகமாகயிப்போது
சிந்திக்கவேண்டாநற் செல்வன்பிறந்தபின்பு
வந்திக்கநீயு மனைவியுமாயப்போது
சன்னிதானத்திற் றரும்பூசனைபுரிந்தே
பொன்னாலயவாசற் பூமரத்தில்தாமிருவர்
தார்வைத்ததொட்டித் தாலாட்டிமைந்தனுக்கென்
பேர்வைப்பாயிந்தா பிடிவலக்கையென்னுசான்



## சூனியத்தைச்சொல்லுதல்



காணிவழக்கிற கருவிநெடுநாள்பகையாய்
ஊணுமெதிராளி யுனக்குண்டேயென்னுசான்
தீவினையாஞ்சூனியத்திற் றேர்ந்தநூற்காரனிடம்
போய்வருந்திவேண்டும் பொருளுமிகவேகொடுத்து
மாரணத்தினாலுமொரு மாப்பாவைபண்ணிவெகு
காரணத்தைச்செய்து கட்டோசியாயப்போது
உன்செய்தலத்தி லொருமூலைப்பாரிசத்தும்
புன்செயலுந்தாபித்துப் போய்விட்டானன்றுமுதல்
நற்குடிக்குத்துன்பமடா நாளும்பலயிழவை

பொற்கொடிக்குநேர்ந்த புலையாட்டுச்சொல்லுகிறேன்
அத்தகினுவும் அதிராடியும்சொற்பனமும்
நித்திரையில்வாய்ப்புலப்பம் நேரானகன்னியர்க்கு
நின்றதுநின்றுப்போற் நெடுமூச்சுமெய்மயக்கம்
இன்றேடொழிந்துதப்பா யென்னுசானஞ்சாதே
மாடுகிடாகன்றுபசு மாடுவேண்டிமாடுகளும்
ஆடுமுதல்சீவனையும் அன்புடனேகாப்பாற்றிவைத்தால்
அடையாளம்நல்குவையா அப்பாவுன்வாய்திறந்து
சடையாமல்சொன்னுல் தருவேன்சுகந்தானும்

---

## மகனுடையசீக்குத் தீருதற்குச்சொல்லுதல்

சொன்னகுறியுனக்குத் தோணலையாயென்னுசான்
இல்லடம்பூமி யிருப்பாகுமத்தலத்தில்
நல்லதொருசாமத்தில் நானிருக்கும்வேளையிலே
மாதாதானுளேந்து வகைமோசம்செய்துவிட்டும்
என்குழந்தைதன்னே இடறுகள்செய்ததினுல்
என்னிடத்தில்வந்து இதைத்தெரிவோமென்றுசொல்லி
பாக்குவைத்துக்கேட்ட பட்சமுள்ளயென்னுசான்
வேறேயொருவன் விரும்பிவரவில்லையடா
கம்பையில்சேர்ந்த கனத்ததொருசோனேமுத்து
வம்பனும்வந்து வாய்குளாச்செய்துவிட்டான்
இன்றுமுதலாக இருபத்தொருநாளில்
சுகமுங்கொடுக்கிறேன் சுற்றத்தார்தன்னுடனே
என்னுடையயெல்லையினில் இருபத்தொருதேங்காய்கள்
உடைத்துப்படைத்தும் உகந்தவாழைப்பழமும்
மயானத்தில்பூசை வகையுடனேதான்போட்டு
ஆசானேவேண்டி ஆலயத்தில்பூசையிட்டால்
பாலகன்றன்சீக்குப் பஞ்சாய்ப்பறந்துவிடும்
கொண்டுவந்தபெண்பேரில் குறையொன்றுநீநினைத்தாய்
நினைத்தவொடுபோகவில்லை நீமணனைத்துத்தினையே
குய்யமொன்றுதானிருக்கக் குறிப்பறிந்தேனென்னுசான்
ஆகையாவிவ்வருத்தம் ஆகாதுசொன்னேனுன்

மனையாள்வருத்தமும் மனதில்வைத்திருக்கிறாய்
இந்தக்குளப்பமதை யெட்டாநாள்தீர்க்கிறேன்
இந்தாபிடிசாம்பல் இப்போசுகந்தாரேன்

இதுவுமது.

சிசுவுக்கிப்போது சீக்கதுவுங்கண்டுமிப்போ
வாட்டமடைய மலைகண்டேனோர்வசனம்
என்னவாட்டமென்று யென்னைக்குறிகேட்டாய்
பாலுங்குடியாமல் பக்குப்பக்கென்றேதான்
தொண்டைநெரிந்து சுழன்றுகிடக்குதிப்போ
வயிறுகொஞ்சம்ஊத்தமதால் வாய்திறக்கவில்லையடா
கொப்பளம்போலாகக் கொப்பளிப்பதென்னவென்றும்
அழுகைக்குறலை அமர்த்தியிருப்பதென்ன
ஆசானிடத்தி லதுவிபரங்கேட்பமென்று
எண்ணிவந்தாயென்னாசா னிதன்விபரஞ்சொல்லுகின்றேன்
வெள்ளிடிபோலாக விழுந்துகிடக்கிறது
இடிந்தபாவனைபோற் கிடக்குதிப்போஎன்குழந்தை
குழந்தைவேணுமென்று குறிப்பிட்டநாளதனில்
என்பேரைவைப்பேனென்று எனக்குமுன்னேசொல்லிவிட்டு
தாய்பேரைவைப்போமென்று தான்சொன்னாளோர்வசனம்
அதுவும்பொறுத்தே னவதொன்றுமில்லையிப்போ
மடிப்பிச்சைகேட்டு வாங்கினான்வாரேனிதோ
எட்டுநாள்தன்னி லென்னாசான்காத்திடுவேன்
என்னாலியன்றமட்டும் என்னாசான்பார்க்குகிறேன்
கைப்பிடிக்குமீறிக் கடந்துவிட்டாளென்னசெய்வோம்
கடந்தபடிக்கு ஞாயம்நடக்கட்டுமிதோ
சாம்பலைவாங்கித் தான்போடுவீட்டினிலே
காப்பாற்றித்தந்தால் கைக்குவளைபோடுவையா
மலையைநினைந்து மஞ்சள்துணிதனிலே
ஒருபணத்தைத்தான் முடிந்து உன்குறையைச்சொல்லியிப்போ
தொந்தரவுசெய்து சுகங்கொடுக்கவேணுமென்று
குலதேவதைகளையுங் கும்பிடவிப்போது
நலங்கொடுக்கவேணுமென்று நம்பிக்கையெடுத்தால்
சுகமுங்கிடைக்குமென்று சொல்லிவிட்டேனென்னாசான்
முள்ளுமுரியாமல் முடித்தபூவாடாமல்
காகம்பறவாமல் காப்பாத்தித்தாரனிதோ.

## பேருகாலமாவதற்குச் சொல்லுதல்.



மங்கைக்குநேர்ந்த வருத்தமிகத்தோணலையா
பாலபருவமதில் பக்குவமாகுமுன்னே
சாலைக்கரையோரம் தான்போகும்வேளையிலே
ஈனப்பயலொருவன் யெச்சனுடன்தொட்டுவிட்டான்
பெற்றானுங்கண்டு பிள்ளையென்றுசொல்லியுந்தான்
கேளாமல்தொட்டதினுல் கிருபையுள்ளயென்னுசான்
ஆணுலுங்குற்றமில்லை அவனெல்லைதன்னிலிப்போ
ஒன்றையகால்பணமும் உடனெல்லைதன்னில்வைத்து
ஈசனறிய யிவனைவிலக்கிடுவேன்
இன்னமுமோர்காரியந்தா னென்னுசான்சொல்லுகிறேன்
ஈரிரண்டுமாதமதில் என்வீட்டினுள்ளேதான்
இந்தமங்கைதானும் இலைகுலுங்காநேரமதில்
சாரிவரும்போது தான்வந்தாளென்னெதிரே
ஓங்கினபோடாய்ப்போட் ஓங்கினவேளையிலே
இல்லரத்தைக்காத்த யென்பிறவியோடிவந்து
என்குழந்தையென்று யென்னிடத்தில்வேண்டியதால்
விட்டுவிட்டேனன்றமுதல் வேண்டுஞ்சுகங்கொடுத்தேன்
கெற்பத்திற்குத்தோஷங் கினவிலுமேநேராமல்
குழந்தைக்குத்தோஷங் கொஞ்சங்கூடவாராமல்
காத்துரெட்சித்துக் காப்பாத்திவைத்தேனுன்
ஊர்வழக்கம்போல உடன்வலியுமேவலிக்கும்
பகவானுல்கட்டவிழ்த்தால் பாலன்பிறந்திடுவான்
ஒன்றுக்குமஞ்சாதே உத்தமியாளென்போலே
குழந்தைபெறுவாள் குழப்பமொன்றுமெண்ணுதே
சாம்பலைக்கொண்டு தான்போடுவீட்டினிலே.
முள்ளுமுறியாமல் முடித்தபூவாடாமல்
காக்கிறேனென்று கைபோட்டுச்சொல்லுகிறேன்
வேறுபேய்வந்தால் விலக்கிநான் சொல்லுகிறேன்

### இதுவுமது.

என்பிறவியைக்கோரி யெண்ணிவந்தாயென்னுசான்
மாதமும்பத்தாகி வழக்கப்படியாக

குழந்தைபெறுவதற்குக் குறிப்பிட்டிடந்தானும்
எந்தவிடமென்றுயென்னைக்குறிகேட்டாய்.
உன்னுடையவீட்டில் ஒதுங்கப்புறமாக
தெற்குத்திசையில் சேர்ந்திருக்கும்விடதனில்
வடக்குப்பக்கத்தில் மனமகிழ்ச்சியாகவேதான்.
இடத்தையொழித்து யென்குழந்தையைவைப்பாய்நீ
பேருகாலமாக்கிப் பிரியமுடனேகாத்து
தருகிறேனஞ்சாதே தவமியற்றமீஸ்பானும்
கட்டவிழ்த்துவிட்டு காத்துக்கொடுத்திடவும்
வேண்டிவருகிறேன் வினைவியொன்றுதானினைத்தாய்
சொல்லுகிறேன்கேளாசான் தொலைதூரம்போகணுமே
மனைவிகெற்பமாகவருந்துகிறுளெனவும்
போவமாவேண்டாமா போனுலுங்குற்றமுண்டா
வென்றுநினைத்தாய்நீ வேறிடத்திற்செல்லாதே
பிள்ளைபிறநதபின்பு பெருமையுடனேதான்
எங்குசென்றுலுந்தான் இதினுலேகுற்றமில்லை
பிறவிக்கொருதுணையும் பின்துணைக்காளில்லாமல்
மயங்கவிட்டுப்போனுல் வருமோசுகந்தானும்
ஆனதினுலென்னுசான் அன்பாகவேயிருந்து
குழந்தையைக்கண்பார்த்து கூடிவழிசெல்லுமையா
ளன்குழந்தையென்று யென்மகனேகேட்பாய்நீ
என்போல்நற்குழந்தை யெனக்குவேணுமென்றுசொல்லி
மனதிலேநினைந்தேன் மாதாவுமப்போது
நானுன்வயற்றில் நலமாய்ப்பிறப்பேனென்று
வாக்களித்துச்சென்றுல் மனம்போலவேபிறக்கும்
இந்தாபிடிசாம்பல் என்குழந்தைவாங்குவாய்நீ

---

## மாட்டுக்குச் சீக்குத்தீரச் சொல்லுதல்.

நாலுகால்சாதி நடமாடுஞ்சீவனிப்போ
நிஎ்றதுநின்றுப்போற் நெடுமூச்சுடனேதான்
திக்குத்திக்கென்று திரும்பயிடமில்லாமல்
இருப்பதைப்பார்த்து யென்னுசான்வந்தேநீ

வழக்கம்போலெந்தனுக்கு மாடுகென்றுபோட்டாக்கால்
பால்காய்ச்சிவைத்து படைத்துநீவந்தாயா
மறந்துநீசெத்தால் வருமாவுயிர்தானும்
என்குறையேயல்லாது யேவல்பில்லியில்லேயடா
எந்தமாடென்று யென்னைக்குறிகேட்டாய்நீ
மாடின்னதென்று வரைவிபரம்சொல்லணுமோ
கட்டித்துரைபார்த்தேன் கருப்புநிறமுள்ளவும்
மெருமைமாடாகுமென்று யெண்ணாதேயென்னுசான்
சிவப்புவெள்ளேசேர்ந்த சிவலேமாடானதும்
பசுவென்றுசொல்லி பகாலேயாயுந்தனுக்கு
காணிக்கைதன்னை கடனைச்செலுத்திவிடு
ஆயிரமாநூறு அஞ்சாதேயென்னுசான்
மஞ்சள்துணியில் வழக்கம்போலென்பணத்தை
முடிந்துபோட்டால்மாடு முன்போலெழுந்திருக்கும்
சாம்பலேக்கொண்டு தான்போடுயென்னுசான்

---

## களவுபோனதைச்சொல்லுதல்.

சோரம்நடந்தவிதம் சொல்லவோயென்னுசான்
மறுதேசத்திலிருந்து வந்துவிட்டேதிருடன்
இல்லடம்பூமி யிருப்பாகுமத்தலத்தில்
ஒருகுளேக்காயில் ஒட்டிப்பிறந்ததொரு
தாயாதிக்காரன் சதிசெய்தானேர்வசனம்
கையைவிட்டுத்தானுங் கடந்துவெளியேறியது
மாத்தான்மனேயில் வைத்திருக்கிறானவனும்
மயிலேஇறகு வலியக்கொடென்றாக்கால்
எப்போதுனக்கு இறகுகொடுக்குமடா
ஆகையால்நானு மவனேயிங்குகாட்டுகிறேன்
கைப்பிடியாகப்பிடித்து காவலிலேவைக்குகிறேன்
உன்னேயறியாமல் உன்வீட்டில்போட்டிடுவான்
உன்பொருள்வந்து உனக்குக்கிடைத்தபின்பு
இன்னானெனவே யிவன்பேரும்சொல்லுகிறேன்
இப்போதுசொல்ல யெனக்குமனதில்லேயடா

மச்சத்துடனே வகையாய்க்கொடுத்தபின்பு
ஒருவாரஞ்சென்றபின்பு ஓடிவாயென்னுசான்
சந்தேகமானவர்க்கு சாம்பல்கொடுத்துவிடு

---

## கலியாணம் நடத்தச்சொல்லுதல்.

—:X:—

மணமாலைசெய்ய வந்துயென்னைக்கேட்டாய்நீ
பிள்ளைக்குமாலையிடப் பிரியமடாயென்னுசான்
தெற்கேபோய்பார்த்து திரும்பிவந்தேனிப்போது
வடக்கேயொருபெண் மால்கோரிவைத்திருக்கேன்
மணையாள்மனது மாமனமார்வீட்டினிலே
செய்தால்நலமென்று தீர்மானஞ்செய்தால்காண்
கிழக்கேபோய்பார்த்தேன் கிலேசமதைவிட்டுவிட்டேன்
மேற்கேபோய்பார்த்தேன் விரும்பியிங்குவந்துவிட்டேன்
பெண்வீட்டுக்காரர் பிரியமதாகவேதான்
கட்டிக்கொடுப்பமென்று கைபோட்டுசொன்னூர்காண்
நல்லவிடமாகையினுல் நமக்கும்பிரியமிப்போ
செல்லக்கலியாணம் செய்துவைத்துப்பார்க்கிறேன்
ஒருகுன்றையுமில்லை உத்தமனேகேளாசான்
பெண்ணுடையமாமன் பிரட்டுரட்டுசெய்யுகிறுன்
வேறேயிடம்நாடி வேண்டித்திரியுகிறுன்
ஆட்டிவைத்துக்கோட்டிக்கொள்வேன் அப்புரமாகட்டுமிதோ
பெண்ணைப்பெற்றூர்மனம்போல பிரியமாய்க்கல்யாணம்
நடக்குமென்றுகம்பையிலே நான்சொன்னேன்முன்னுடி
பிசகு அணுவளவு பேதகமும்வாராது
மணக்கோலஞ்செய்ய மனதிலிருப்பதினுல்
தடையின்றிகாரியங்கள் தானடக்குமஞ்சாதே
கூடயிருந்து குறைவில்லாமற்செய்கிறேன்
யெந்தமாதமென்று யென்னைக்குறிகோட்டாய்
வருகிறஆனி மாதத்திற்குள்ளாக
தீர்மானமாக தீர்த்துமுடிக்கிறேன்

---

## திருட்டுப்போன மாட்டுக்குச் சொல்லுதல்.

———:(※):———

யென்விட்டினுள் நுளைந்தேன் யென்காலியைப்பார்த்தேன்
காலிக்கிவாட்டமென்று கதைசொன்னேனென்னாசான்
யென்னவாட்டமென்று யென்னைக்குறிகேட்டாய்நீ
சோரங்கலமதாய் சொக்கினபாவனையாய்
சோரம்நடந்துவிட சொற்பனமுங்கண்டேனான்
யெந்தவிடம்போனதென்று யென்னைவருந்துக்கேட்டாய்
போனவிடத்தைப்பார்த்தேனென்னாசான்
ஊருக்குமேற்கே ஒருகாததூரமதிற்
கொண்டுபோய்வைத்தான் குறிப்பாய்மலைதனிலே
யெத்தனைநாளாச்சுதென்று யென்னைக்குறிகேட்டாய்நீ
இதுகூடச்சொல்லணுமா யெக்னகுதெரியாதா
மூந்தாநாளெல்லில் முதர்சாமவேளையினில்
மாடுதவறினது மன்னாமயங்காதே
யீரிரண்டுநாளில் யென்மாடிருக்குதென்று
மச்சந்தருகிறேன் மயங்காதேயென்னாசான்
யென்னமாடென்று யென்னைக்குறிகேட்டாய்நீ
சொல்லத்தான்வேண்டுமே சுந்தரமாய்ச்சொல்லுகிறேன்
மாடென்றால்தோணலையா வகைவிபரஞ்சொல்லணுமா
மாடுதனிலெத்தனையோ வகையுண்டேயென்னாசான்
உழுகிறமாடை உண்மையுடன்பார்த்தேன்
கறக்கிறமாடு கத்துதடா இப்போது
வண்டியிற்போட்டு மருமாட்டைக்காணமென்று
பசுவென்றெருமையென்றும் பகரவும்வேணுமே நாதான்
யெருமைதானென்று யென்னாசான்போய்ப்பார்த்தான்
கண்ணுக்குத்தோற்றவில்லை காணக்கிடைக்கவில்லை
மாடுவருமா வராதாவெனக்கேட்டாய்
கட்டுத்துறைசேர்த்தால் கைக்குவளைபோடுவையா
சேனங்குதிரையுடன் செல்லுகிறேனிப்போது
மாட்டைத்திருப்பி வருகிறேனென்னாசான்
மயக்கமினிவேண்டா மாடுகொண்டுநான்வாறேன்

## ஊருகளுக்குப் போகச்சொல்லுதல்.



யென்னைத்தெரிசிக்க யென்குழந்தைநீகேட்டாய்
தெற்கென்றும்வடக்கென்றுந் திசையுண்டேயென்னுசான்
கிழக்கென்றுமேற்கென்றுங் கேள்வியுண்டேசொல்லுகிறேன்
திசைநான்கும்பார்த்தேன் தென்திசைக்குப்போயிவந்தேன்
மேற்றிசையும்பார்த்து விரைவிலிங்குவந்துவிட்டேன்
கீழ்த்திசைக்குப்போனேன் வெவுரிவிலாசம்பார்த்தேன்
வடதிசையிற்சென்று வழக்கமுடன்வீற்றிருந்தேன்
என்னுடையகோவிலுக்கு என்குழந்தாய்நீதானும்
குடும்பத்துடனே கூட்டிவரவேகேட்டாய்
இல்லத்தைக்கார்த்து யிருக்கின்றதெய்வமதை
கும்பிட்டெழுந்தால் கூடவருவேநான்
கறந்தபால்தானுங் காகங்குடியாமல்
பிசகுஅணுவளவு பேதம்வாரமலேதான்
காத்துரட்சித்து காப்பாத்திவைக்கிரண்டா
சாம்பல்பதனந் தற்கார்க்கவேணுமிப்போ
கொண்டுபோய்ச்சாம்பல் கொடுத்துவிடுவென்னுசான்



## துலையிற்போனவர்கள் வருவதற்குச் சொல்லுதல்.



எழுசமுத்திரமும் இப்போதுபார்த்தேநான்
சத்தாசமுத்திரத்தைத் தாண்டியேவந்தேநான்
மலைமேலேவைத்த மணிவிளக்குப்போலாக
யென்குழந்தைதானு மிருக்கிறனிப்போது
சம்பாத்தியங்கள் தடையறவேசெய்யுகிறன்
பங்குக்கொருத்திவந்து பார்த்திருக்கிறுளவளும்
வேற்றுமையென்றெண்ணு வேண்டிவந்தநம்குழந்தை
அவளாலேதோச மணுவளபுமில்லையப்பா
போனவருடத்தில் பொருள்சம்பாதிக்கவென்று
தானும்வருந்த என்னுச்சியிருளு தான்போயிகார்த்தாளாம்
பாலனுக்குயார்காவல் பார்த்திபனேநீகேளு
உன்விட்டைக்கார்த்த உத்தமனும்சோனைமுத்தும்

முத்தாரக்கும்போயி முன்னேநின்றுகாப்பாற்றி
வைத்துஇருக்கிருள் மகனேமயங்காதே
முள்ளுமுரியாமல் முரித்தபூவாடாமல்
கைப்பிடியாகப்பிடித்து காத்துக்கொண்டுவாரோநான்

---

## ஓடிப்போன பெண்கொடிக்குச் சொல்லுதல்.



என்பிள்ளைதானு மெனக்குத்தெரியாமல்
வழிதவறிப்போன மார்க்கந்தெரியவென்று
குறிகேட்போமென்று குறிப்பிட்டாயென்னுசான்
ஒக்களுமக்களும் ஒருகுழைக்காயினிலே
வம்பனொருவன் மயங்கவேசெய்துவிட்டான்
மயக்கத்துடனே வழிபிசகிப்போனுள்காண்
இந்தக்கீழ்திசையி லிருக்கிருள்பெண்கொடியும்
மாத்தானொருவன் வழிபாடுசெய்தான்காண்
மாத்தானுல்குற்றம் மங்கைக்கியில்லையடா
வழிதெரியாமல் மயங்கியிருக்குகிருள்
யென்காவல்தன்னி லிருக்கிருள்மாராமல்
துன்பமெல்லாந்தீர்த்து சுகமாகவைத்திருக்கிறேன்
யென்பிறவிபோ யிப்போதழைத்தாக்கால்
கூடவேவந்திடுவாள் கொஞ்சமேனுமஞ்சாதே
சந்தேகம்விட்டு சாம்பலைநீபிடியும்

---

## மனைவீடு கட்டச் சொல்லுதல்.



நல்லமனையும் நான்பார்த்தேனென்னுசான் .
இந்தமனையை என்மனையென்றெண்ணுவைநீ
முந்தாநாளுன்கனவில் முதற்சாமநேரத்தில்
மல்லிகைப்பூமாலை வந்துகழுத்திற்போட்டேன்
இன்னமுந்தான்யேக மிருக்குதுகாண்பின்னுடி
வருகிறவைகாசி மாசம்மணமுகூர்த்தம்
செய்துஅடுத்தமனை சேர்க்கையாய்வாங்கிடுவாய்
வீடுமுதல்கட்டி வெகுவேலைதான்நடக்கும்

பணச்சிலவென்றெண்ணிப் பாராதேயென்னுசான்
வேண்டும்பணங்கள் விரைவாகநான்தாரேன்
சித்தமதிலின்னமொரு சேதிநினைத்தனைநீ
நினைத்ததொருகாரியமும் நேர்மையாய்ச்சொல்லுகிறேன்
இந்தமனையி லிதற்குமுன்னிருந்தவர்க்கு
குழந்தையில்லையென்று குறிப்பிட்டாயென்னுசான்
அதைநீநினையாதே அவன்லபிதம்அவ்வளவு
தானென்றுநினைப்பாய் தக்கபடியாக
வேண்டுங்குழந்தை வெகுவாகநான்தாரேன்
வீடுமுதல்கட்டி விளக்குமுதலேத்திவைத்து
குடியேத்திவைத்துக் கொடுக்கிறேன்லாபமெல்லாம்
உனக்குத்தருகிறேன் உத்தமனே அஞ்சாதே
இந்தவீடென்வீடாய் இருப்பாய்பவுசுடனே
சொந்தமுடனென்வீட்டில் சுகமாகநீயிருப்பாய்

---

## துருசுப்பேயடித்ததற்குச் சொல்லுதல்.

எண்டாமயங்குருய் என்மகனேகத்தாதே
தாவரத்திற்சென்று தான்பார்த்தேன்தீர்மானம்
மன்னருக்கிப்போது வாட்டம்வரக்கண்டேனுன்
என்னவாட்டமென்று யென்னைக்குறிகேள்க்கிறுய்
நேற்றிரவில்பூமுடித்து நெஞ்சகத்திலொன்றையெண்ணி
மாதிடத்திற்சென்று மருவியிருந்துவிட்டு
ஈரசந்திவேளை யிருள்கவிந்தவேளையிலே
ஒருவன்தனியனு மொன்றுநினையாமல்
பாதைவழியாக பாலன்வருகையிலே
மதுரைவீரன்காவல் வலமாய்வருகையிலே
யெதிர்பட்டுக்கொண்டான் யீரசந்திவேளையிலே
வாயில்நுரைபரிய மண்ணையடித்துவிட்டான்
ஆகையாலென்னுசான் அடியேனிடத்தினிலே
குறிகேட்போமென்றுவந்தாய் குறித்ததோருகாரியத்தில்
வடுப்படமாட்டாதுஅந்த மங்கையவள்கையாலே
தீர்த்துவிடவேண்டும் தீர்மானஞ்சொன்னேனுன்

கம்பைக்கொருபணத்தைக்கட்டிமுடித்துவிடு
சாம்பலைக்கொண்டு தான்கொடுப்பாயிப்போது
நாலுநாளைக்குள்ளே நான்பார்த்துக்கொள்ளுகிறேன்

---

## நஞ்சைபுஞ்சை விளைவுகளைச் சொல்லுதல்.

தாவரத்தைக்கோரிதானகேட்டாய்யோர்வசனம்
தாவரமென்றுனக்குத் தான்தெரியவில்லையடா
நஞ்சைபுஞ்சையென்று நன்னிலத்தோர் சொல்லுவார்கள்
அந்தநஞ்சைதானும் அதிவிளைவுண்டாவெனவே
இந்தவருடந்தானும் ஏராளமாகவேதான்
விளையுமாவென்று வினவியென்னைக்கேட்போமென்று
பாக்குவைத்துக்கேட்ட பட்சமுள்ளஎன்னுசான்
நானிருக்கும்போது நல்லவிலைவுண்டாக
கேட்கவரவேணும் கீழ்புரத்துநஞ்சையிலே
வாட்டமிருக்குதென்றும் மலையிடத்திற்கேட்பமென்றும்
வந்தாய்நீயென்னுசான் மயங்காதேஇப்போது
வாட்டத்தைத்தீர்த்து மயக்கமும்போக்குகிறேன்
ஒருமரக்கால்நெல்லை மலைக்கு உடனேகொடுத்துவிடு
குடும்பசாப்பாட்டுக்குநெல்லு கொடுக்கிறேன்கத்தாதே
சாம்பலைக்கொண்டு தான்வயலில்போட்டுவிடு

---

## கடன்தீருமாவெனக் கேட்பவர் சொல்லுதல்

யேண்டா மயங்குறாய் யென்மகனேகத்தாதே
சொன்னவிபரந் தோணலையாயின்னேரம்
குலதெய்வமாக குடிபாதுகாத்துவந்த
பவாடைக்காரி பழிகாரராக்குமுத்து
பூவாடைக்காரி புதுமையுள்ள ஆவுடையாள்
உன்வீட்டைக்காத்திருந்த உத்தமிக்குயென்னசெய்தாய்
கால்துட்டுச்சாம்பிராணி கனமாகப்போச்சுதடா
வருடமொருவிசைதான் வைத்துக் கும்பிட்டாயா

கனவிலும்நீதான் கையெடுத்த துண்டாநீ
யென்சொரூபந்தன்னை யிதமாய்க் காண்பிக்கவென்று
சகலத்தினிலுந் தான்குறையக் காட்டி வைத்தேன்
ஓயாக்கனவும் உனக்குநான் காட்டிவந்தேன்
அதிலும்நினைக்கவில்லை ஆனதினு லிப்போது
குணமொன்றையேற்படுத்தி உண்மையுடன்வைத்தேனுன்
அந்தத்தருணமும் அடியேனால் வந்ததடா
இந்தமட்டுந்தானென் றெண்ணுவாயோ யென்னுசான்
தெரியாத்தனமென்று செப்பவந்தா யிப்போது
குற்றமன்னித்துன் குறைதீர்த்துவைக்கிறேன்
கடன்தீர்த்துவைத்தால் கைக்குவளைபோடுவையா
மாசப்பிறப்பும் வந்தஅஞ்சாந்தேதியென்றும்
ஈரஞ்சும்மூவஞ்சும் யிருபதாந் தேதியென்றும்
கார்த்திகைரோகணியும் கண்டபவரணையும்
நல்லஅமாவாசையென்றும் நலமானசீட்டுகளில்
போட்டுவருகிறையா புதுமை யுடனேதான்
சீட்டெடுத்துநான்தாரேன் தீர்க்குறேனுன்கடனை
வரவேண்டியகடனை வாயிதா விற்போயி
கேட்டாயாயென்னசொன்னான் கிளம்புமா னானில்லாமல்
வாங்கிடுவையா வழிதெரிய மாட்டாயே
என்னென்னகாரியத்தி லிடஞ்சல்வந்த தென்றுணர்ந்தாய்
வியாபாரந்தனில் வெகுலாப முண்டோடா
மாடுகன்றுகாலி மனைவி முதல் யாவருக்கும்
சுகமென்றுசொல்லுவையா சொந்தநல்ல வெள்ளாண்மை
நல்லவிளைவுண்டா நான்சொன்னே னென்னுசான்
காலக்கிரகமென்று கதரினையே இப்போது
காலக்கிரகத்தைக் காத்தாய்ப் பரக்கடித்து
எடுத்ததொருகாரியத்தில் ஏராள மாய்லாபம்
கொடுக்கிறேனஞ்சாதே கூடவே நானிருந்து
சீட்டுமெடுத்து தீர்க்கிறே நற்கடனை
வேளாண்மைநன்றாய் விளைவுவரச் செய்யுகிறேன்
காலிமுதல்பாவையுதான் காப்பாத்தித் தந்திடுவேன்
கையெடுத்துக்கும்பிடவுங் கருத்துண்டா யென்னுசான்
நல்லதென்றுசொல்லி நலமா யுரைத்ததினுல்

யென்பெட்டிதன்னை யெடுத்துநீ டார்த்தனையா
சீலைகிழித்து சிதரிக் கிடக்குதிப்போ
வாடைபொருக்கவில்லை வாங்கிவைப்பாய் சேலையொன்று
அடுத்தசெவ்வாய்க்கிழமை அல்ல வருஞ்சேர்ந்து
கையெடுத்தா லுந்தனுக்கு காட்டுகிறேன் லாபமெல்லாம்
குடும்பத்தைக்காப்பாத்தி குடிகார்த்துக் கொள்ளுகிறேன்
மற்றொன்றுமெண்ணாதே வாங்கு விபூதிதனை

---

## சீட்டுப்பிடித்து நடத்தச்சொல்லுதல்.

மலைவாயம்பார்த்து வந்தேனா னிப்போது
உலகத்தினுண்மை உணர்ந்தேன்கே ளென்னுசான்
பொருளென்றுசொல்லுகிற பொருளுண்டே யென்னுசான்
சேர்க்கையதாய்ஆயிரம்பேர் சேர்ந்து நடத்துகிற
சீட்டுப்பிடித்து செலுத்தவேணு மென்றேதான்
ஆசானிடத்தி லதுவிபரம் கேட்பமென்று
கம்பையிலேபாக்குவைத்துக் காத்திருந்தா யென்னுசான்
திரமையிருந்தால் தீர்மானஞ் சொல்லுகிறேன்
கூட்டாகச்சேர்ந்து கொட்டுச் சீட்டுப்பிடித்து
நடத்தலாமென்று நம்மைவந்து கேட்டாய்நீ
கூட்டுநல்லவாணிபத்தில் கோளுவரு மென்னுசான்
ஆசையால்நீயு மடியேன் பெலத்தாலே
சுமக்கும்வரைசீட்டு சுகமாக வேபிடித்து
நடத்திவாசீட்டை நான்கூட வேயிருந்து
அனந்தவிதலாம் அப்பா தருகுகிறேன்
மலையாமல்நீநடத்து மகனே மயங்காதே
யெடுத்தவியாபாரத்தி லீனம் வாாதபடி
காத்துத்தருகுகிறேன் கம்பையினிற் தீர்மானம்
சொன்னதுனக்குத் தோணலையா யென்னுசான்
நல்லதின்னமோர்வழக்கு நலமுடனே சொல்லுகிறேன்
இன்னமொருகாரியத்தை யெத்தனித்தாய் தள்ளிவிடு
இந்தமட்டும்லாப மெவ்வளவோ தான்கிடைக்கும்
கம்ப்பயிலேசாம்பல் கவலைவிட்டுத் தான்வாங்கு

---

## தோட்டம்வைத்துப் பயிர்செய்யச் சொல்லுதல்.



தாவரமென்று சாற்றினது தோணலையா
இவ்விடம்பூமி யிருப்பாகு மத்தலத்தில்
புன்செய்தலத்தில் போய்த்தோட்டம் வைப்பமென்று
யெண்ணியிருக்கின்று யென்றுசான் கத்தாதே
வாழைகமுகு வைத்தால் பயிராகும்
கரும்புநல்லதோட்டம் கருத்துடனே வைத்தாக்கால்
அரும்புதுறைபாம லதைக்காத்துநான் தாரேன்
தேங்குபலாமாதனையும் திரமுடனேவைத்தேனுன்
ஓங்கிவிளையும் உனக்குநான்சொல்லுகிறேன்
புன்னைமராமருது பூந்தோட்டம்வைக்கவென்று
மனதில்நினைத்தேன் வழிதெரிய வில்லையடா
பூந்தோட்டம்வைப்பதிலும் புகையிலைதான் வைத்தாக்கால்
நல்லதொருலாபம் நமக்குக் கிடைக்குமடா
அல்லவென்றால்தள்ளிவிடு அப்பா மயங்காதே
தானியவர்க்கந் தான்விதைத்தால் நல்விளைவு
விளையுமென்றுவுந்தனுக்கு விளம்பினேன் முன்னடி
கம்பம்புல்சோளங் கருதிய தோர்வாகும்
குதிரைவல்லிதானுங் கூட விதைத்தாக்கால்
ஏராளமாக எனக்கு விளையுமடா
கருணைக்கிழங்கு கருதிபசே மங்கிழங்கு
சக்கரைவள்ளிக்கிழங்கு தவறாது வைத்தாக்கால்
நல்லவிளைவுண்டாகும் நான்சொல்லும் வார்த்தைநம்பு
அல்லவென்றால்மொச்சை அப்பனே தான்போடு
கூ[illegible]த்தொவரைகளும் கூடியதட்டப்பயிறும்
காணப்பயறும் கருத்தஉளுந்தம்பயறும்
பாசிப்பயறும் பச்சமுடனேவிதைத்தால்
காத்துத்தருகிறேன் கைபோட்டுச்சொல்லுகிறேன்

———

## கிணறுவெட்டுவதற்குச் சொல்லுதல்.

———:( ):———

கஞ்சைபுஞ்சைதன்னை நான்போயிப்பார்த்தேனுன்
பயிர்செய்யத்தண்ணீர் பக்குவமில்லாததினால்
கிணறுவெட்டவேண்டி கேட்டுவந்தாயென்னுசான்
தென்புரத்தில் தண்ணீர்தேடினேனிப்போது
கிட்டக்கிட்டக்கவில்லை கீழ்புறத்திற்போய் நுழைந்தேன்
பாரொன்றுவந்து படர்ந்திருக்குதென்னுசான்
வடபுறத்துமூலையிலே வாய்க்காதுதண்ணீரும்
தயிரியமுண்டானால் தான்வெட்டுநீகிணற்றை
வடகிழக்குமூலையிலே வாய்த்திருக்குதண்ணீரிப்போ
உதவிபுரியுகிறே னுத்தமனேயஞ்சாதே
யெப்பவெட்டுவோமென்றென்னைக்குறிகேட்டாய்நீ
வெட்டுகிறகாலம் விளம்புகிறேன்கேளாசான்
சந்திரனுங்குருவும் நாலொன்றாய்ச்சேர்ந்திருக்கக்
கூடியநாள்பார்த்துக் குறிப்பிட்டு நீதானும்
மழையைநினைந்து மயங்காதேயென்னுசான்
குலதேவதையைகுறிப்பாக நீநினைந்து
கிணறுவெட்டினையானால் கிளம்புமிதோ தண்ணீரும்
வேண்டும்பயிர்கள்செய்து விருத்தியுடனேயிருப்பாய்
சாம்பலைவாங்கித் தைரியமாய்ச் சென்றுவிடு

---

## கருப்புக்கண்டதற்குச் சொல்லுதல்.

———( )———

இல்லத்திற்றானு மிருக்கின்ற பெண்கொடியாள்
சோர்வுஅடைய துரைகண்டே னோர்வசனம்
யென்னசோரமென்று யென்னை மருத்துக்கேட்டாய்
வாலைப்பருவமதில் மங்கைநல்லாளப்போது
இலைகுலுங்காநேரமதில் இந்தமங்கையாள் தானும்
கணவனுடன்சேர்ந்து கண்மயக்கத்துடனே
வெளியேவரும்போது வெகுவினோதமாக
சடையுமுடியுடனே சன்னசிக்கோலமதாய்க்
கப்பரையையேந்திக் காற்சலங்கைதான்போட்டு

பூக்துடலைதூக்கி இருளன் போகும்வழிதனிலே
பொன்சுடலையோடி பூக்குடலையைப்பிடுங்க
அபயம்அபயமென்று அலறுமந்தவேளையிலே
இந்தமங்கைதானும் எதிர்ப்பட்டாளந்நேரம்
சுடலைகுலவையிட்டுத் தூக்கினான்கைத்தடியை
மார்நாட்டுபொன்கருப்பு வாதாடிவாதாடி
மறத்திமகன்வன்னியனை வணங்கியேவேண்டினதால்
ஒதுங்கிப்போய்விட்டான் உண்மையுடன்பெண்கொடியாள்
கண்டுபயந்தாள் கண்கொள்ளாக்காட்சியுடன்
மாதுபயந்தாள் மகாமுனியும்தான் துயர்ந்தான்
அந்தக்குறையை அகற்றாததினாலே
காயிருக்கப்பூவு காணாமற்போவதினால்
ஈரிரண்டுமாத மிருந்ததொருகெற்பமதை
உதிரம்உதிரமாய் ஊற்றும்படியாக
சுடலையுடன்வந்து தொட்டுவிட்டானென்னாசான்
அதினாலுதிரமதாய் அடுமைக்குக்காட்டினது
இந்தத்தடவையென்று யெண்ணாதேமுன்னாடி
அனேகதடவை அழிந்ததுகெற்பந்தானும்
விபரந்தெரியாமல் விளம்பியும்பாராமல்
காலக்கிரகமென்று கவனிக்காதேயிருந்தாய்
தீர்த்துத்தருகிறேன் திடஞ்சொல்வேனஞ்சாதே
காத்துக்கொடுக்கிறேன் கைபோட்டுத்தாரேனிதோ
மயானத்தில்பூசை வகையுடனேதான்போட்டால்
சுடலைதனைவிலக்கிச் சுகந்தருவேனென்னாசான்
இந்தாபிடிசாம்பல் யென்குழந்தைகத்தாதே

---

## கனவுகண்டதற்குச் சொல்லுதல்.

மாடுகளைமேய்த்தேன் மனையிற்படுத்திருந்தேன்
சுழுத்திதனில்மனது சொக்கியிருக்கும்போது
கனவுகண்டுநானெழுந்து கதைசொல்வேனென்னாசான்
கிணறிடிந்தபாவனைபோல் கெடிகலங்கும்போதினிலே,
தலையைத்திருகத் தாமிருவர்கைபிடிக்க

மலையைநினைத்து வாய்குளறிமெய்பதறி
இருக்குந்தறுவாயில் இருவருமொன்றாயெழுந்து
தூக்கியேசெல்லத் துணிந்துவரும்போதினிலே
மழையானதுபெய்ந்து மழைத்தண்ணீர்தான்திரண்டு
ஆறாய்ப்பெருகி அதுவருகும்போதினிலே
தண்ணீர்கடக்கத் தான்முடியமாட்டாமல்
காத்தாய்ப்பறந்து கடந்துவந்தேன் ஆறுதனை
மலையிலேதீப்பிடித்து மகாகொடுமையுண்டாகி
கனசேதமாகவிதைக் கண்டுமனந்தேறி
பூமிவெடித்துப் புனலானதுசொரிந்து
வாரிபோல்பொங்கி வருகின்றநேரமதில்
பெண்கொடியாளங்கொருத்தி பிரம்பொன்றகைப்பிடித்து
விபூதியைப்போட்டவுடன் வேகமதுதணிந்து
சாதாரணமாய்த் தானிருக்கும்போதினிலே
புஞ்சைநிலந்தன்னில் புல்லறுகுதான்முளைத்து
பயிரில்லாமற்போய் பார்த்தோர்க்குத்தோணுமல்
பூமியசைந்து பூலோகத்தில்விழவும்
நிலத்திலேசம்பயிர்கள் நேர்மையுடன்செய்கையிலே
பயரில்லாதேபோகப் பார்த்துவந்தேனென்றுதான்
இன்னமொருவிதத்தை யென்னவென்றுசொல்லுவேனன்
ஆகாயந்தன்னி லதோ இருட்டாய்த்தானிருட்டி
வானத்திலப்பாக வானமிடிந்ததுபோல்
சூரியனுஞ்சந்திரனும் தோற்றமுடனொன்றாக
சேர்ந்துசமுத்திரத்திற் றிரளாய்விழுவதுபோல்
கனவுகண்டுமெய்பதறிக் கண்கலங்கும்போதினிலே
சுடுகாட்டிலேதான் சுடும்பிணத்தைப்போலிழுத்து
பிணந்தின்னும்பேச்சியைப்போல் பிணம்பிடுங்கித்திங்கையிலே
பத்துமாதஞ்சுமந்த பாலகனையப்போது
குத்திகுடல்பிடுங்கிக் குலவையிடும்வேளையிலே
சர்ப்பம்வந்துதான்பாயத் தான்கண்டேனோர்வசனம்
வானில்வெளிச்சமுடன் வந்துதனலெறிய
கண்டேனோர்தீர்மானங் கன்னியொருத்திவந்து
நகைகளைப்பறிக்க நான்கண்டேனோர்வசனம்
வானிலிடிவிழுந்து மயங்கிநிற்கும்போதினிலே

சிங்கமொன்றுவந்து சீரிவிழுந்ததுபோல்
புலியொன்றுவந்து போய்ப்பாயவந்ததுபோல்
நாய்கண்டுதான்விரட்ட நான்கண்டேனோர்வசனம்
அழுதகுறலாக அருங்குறலாய்க்கூரிகையும்
அழுதுவரவும் அவளையங்குதான்விரட்டி
சற்றேமயிர்பிடித்துத் தள்ளிவிடக்கண்டேனான்
யென்கூடவேபிறந்த இளங்கொடியாள்பெண்ணொருத்தி
மகளைக்கலியாணம் வகையாகச்செய்யவென்றும்
கைபோட்டுச்சொல்லி கைபிடியாகப்பிடித்து
கலியாணஞ்செய்யவென்று கைபோட்டுச்சொன்னாள்காண்
வதுவைசெய்யஎந்தனுக்கு மனதில்லைசொல்லிவிட்டேன்
இதுவுமொருதீர்மான மிருக்கட்டுமென்னுசான்
வீட்டுச்சுவரிடிந்து மேல்விழுந்தபாவனையாய்
யானைவந்துதான்பிடிக்க அதற்குநான்தப்பிவந்தேன்
புதுப்புடவைகட்டி பூமுடித்துப்பார்ப்பதுபோல்
கனவுகண்டுதானுங் கண்விழித்துக்கண்டேனான்
இந்தகனவை என்னிடத்திற்கேட்கவந்தாய்
குறிமுகத்தில்வந்து குறிப்பறிந்தாயென்னுசான்
கனவினால்துக்கங் கடுகளவுமில்லையிப்போ
இந்தக்கனவி லேதொன்றுமில்லையப்பா
மனதிலொன்றுநீயும் வருத்தங்களெண்ணாதே
இதுவெல்லந்தானு மென்னுடையகோட்டாலே
நானிருக்குந்திக்கை நன்றாயறியாமல்
இருக்குந்திசையை யெண்ணியேபாராமல்
கால்தனையேநீட்டி கனமயக்கமாய்ப்படுத்தாய்
ஆனதினால்வாய்புலம்ப அடியேனுஞ்செய்துவிட்டேன்
யென்திசையில்நீயும் இனிமேல்கால்நீட்டாதே
உனக்குச்சுகமும் உண்மையுடன்நான்தாரேன்
முள்ளுமுரியாமல் முடித்தபூவாடாமல்
காகம்பறவாமல் காப்பாத்திநான்தாரேன்
சாம்பலைவாங்கித் தான்செல்வாயிப்போது

## சாமிகும்பிடச்சொல்லுதல்

———()———

குடும்பத்தைக்காத்த குலதெய்வமானதையும்
கையெடுக்கவேணுமென்றுங் கர்த்தனிடம்போகவென்றும்
கேட்டுவந்தாயென்னுசான் கிருபையுடன்சொல்லுகிறேன்
இருபத்தோர்பந்தியினிலெங்கும் நிறைந்திருக்கும்
அய்யன்பந்திதன்னை யன்பாகக்கும்பிடநீ
கன்னிமார்தேவதையைக் கையெடுக்கவேணுமென்றும்
பேச்சிதன்னைக்கும்பிடவே பேணிவந்தாயிப்போது
ஆவுடையம்மாளை அப்பனேகும்பிடலாம்
மலையிலேராக்கு வருந்நாகிருளிப்போது
கோட்டைமலையானைக் கும்பிடவுநீநினைத்தாய்
கருப்பனைக்கும்பிடவே கருத்தில்நினைத்தாய்நீ
இன்னமொருதீர்மான மியம்புகிறேன் கேட்டருள்வாய்
நல்லமாடன்கோயில் நானும்போய்பார்த்தேன்
சோனைமுத்தன்சொன்ன சொல்தவறிவிட்டாய்நீ
மாடனுடகோயில் வலதுபுறமாய்நாடி
சாத்தானருகில் தானிருக்குமுத்திருளு
பாதம்வணங்கிப் பாவந்தொலைப்பமென்று
யென்னிடத்தில்வந்து என்னைக்குறிகேட்டாய்
தெய்வத்தைக்கும்பிடவே செப்புகிறேனிப்போது
முப்பூசைபோட்டு முப்பழமுந்தான்படைத்து
மனதிலிருக்கும் வருத்தங்களுந்தீர்ந்து
சுகமாயிருக்கச் சொல்லுகிறேன்கேளாசான்
சாமியைக்கும்பிடச் சம்மதந்தானெந்தனுக்கு
மனவருத்தமொன்று வைத்திருக்கிறாய்நீயும்
யென்னவருத்தமென்று என்னைக்குறிகேட்டாய்நீ
சொல்லத்தான்வேண்டுமோ சொல்லுகிறேனென்னுசான்
ஒக்களுமக்களும் ஒருகுலைக்காயினிலே
சண்டையொருவன்போட்டுத் தானிருக்கிறானவனை
சேர்த்துப்பிடித்துச் சிறப்பாகக்கும்பிடவே
தாயாதிக்காரன் தான்வரவுமாட்டேனென்று
வாயாலேசொன்ன வகைகேட்பேனென்றேதான்
என்னிடத்தில்வந்து இதுவிபரங்கேட்போமென்று

வந்தாய்நீயிப்போது வளர்க்காதேயென்னுசான்
சகலரையுஞ்சேர்த்துத் தான்கும்பிடவேண்டும்
ஒன்றைவிட்டுஒன்று ஒதுக்கிவைத்துநீதானும்
கைவெடுப்பாயானல் கனசேதமாகுமென்று
கம்பையில்தீர்மானம் கதைசொன்னேனென்னுசான்

---

## காவடி எடுக்கச் சொல்லுதல்.

இன்னமொருசேதியொன்று எண்ணியிருக்கின்றாய்நீ
ஆண்டிக்கிப்போது அருமையுடனேதான்
காவடியெடுக்கக் கருத்தில்நினைந்தாய்நீ
என்னகாவடிதா னெடுப்போமெனக்கேட்டாய்
சக்கரைக்காவடிகள் தானெடுப்பார்ஊரிலுள்ளோர்
பால்காவடிகள் பாரிலுள்ளோர்தானெடுப்பார்
பன்னீருக்காவடியும் பச்சிளநீர்க்காவடியும்
மச்சநல்லகாவடியும் வகையாகவேயெடுப்பார்
சாம்பிராணிக்காவடியும் சக்கரைக்காவடியும்
பூக்காவடியும் புனல்தீர்த்தக்காவடியும்
விபூதியின்காவடியும் வேற்காவடிகளையும்
சேவல்காவடியும் சிறப்பாயெடுத்தாலும்
எனக்குப்பிரியம் இளநீரின்காவடிதாம்
சொல்லுமிடத்திற் துரிதமுடனேவாங்கி
குடலையிற்போட்டு குவலயத்தோர்தாமறிய
ஊரறியநீயும் உறவின்முறையாருடனே
மயேசுரபூசை வகையாகவேநடத்தி
ஆண்டிக்கபிஷேகம் அருமையுடன்செய்துவைத்து
வரவேணுமென்று மனத்தில்நினைந்தாய்நீ
நினைத்தபடிக்கிப்போது நீநடத்தவுத்தரவு
தந்தோம்விபூதி தான்வாங்கிச்செல்லுமையா
இதுமுதலெட்டானு ளெண்ணிவிரதமிருந்து
பகவானை யெப்பொழுதும் பரிவாகநீநினைத்து
விரதமுடித்து வேலைதனைநடத்து
கோரினகாரியங்கள் குறிப்பாய்முடித்துவைப்பேன்

## கோர்ட்டு பிராதுசொல்லுதல்.

உனக்கும்எதிரிக்கும் உடன்பிராதுநடந்த
வழக்குதனைச்சொல்லுவேன் மயங்காதேயென்றுசான்
கோர்ட்டிலெதிரி கொடுத்தபிராதுதனை
வாங்கிநான்பார்த்தேன் வகைமோசம்போய்விட்டான்
யென்னவிதமோசமென்று யென்னைக்குறிகேட்டாய்
வாதிவக்கீல்கேட்ட வாக்குமூலப்படியே
தாறுமாறுயுளறித்தான் கொடுத்தான்பெட்டிஷன்
நாலுபேர்சேர்ந்து நலமாய்கொடுத்ததொரு
வாக்குமூலத்தை வாங்கிநான்பார்த்துவந்தேன்
அனுகூலமென்று அறிந்துவந்தேனென்றுசான்
உன்னுடையசாக்ஷி உளறிவிட்டானென்றேதான்
மனதில்நினையாதே வகைமோசம்போகுமென்று
உன்னுடனேசேர்ந்த உத்தமொருமனிதன்
வகைமோசமாக வாக்குமூலங்கொடுத்தான்
அதினாலேமோசமில்லை அதைப்பார்த்துக்கொள்ளுகிறேன்
எப்படியாவது இடர்தீர்த்துவைக்குகிறேன்
வழக்கைஜெயமாக்கி வைக்குகிறேனஞ்சாதே
சருதும்வழக்குஜெயித்தால் கைக்குவளைபோடுவையா
உன்னுடையவக்கீலிடம் உத்தமனேநான்போய்
கனவுதனிலேசொல்லி காண்பிவித்தேன்தீர்மானம்
நேற்றிரவிலுன்கனவில் நேர்மையுடன்கேசுதனை
வாய்தாப்போட்டதுபோல் வாய்புலம்பும்வேளையிலே
திடீரெனவேதான்விழித்துச்சேதி மறந்துவிட்டாய்
ஆகையால்நானிருந்து அடிக்குகிறேன்தீர்மானம்
ஆசான்மயங்காதே அடிமைபதாாதே
அனுகூலஞ்செய்துவைப்பே னஞ்சாதேயென்றுசான்

---

## நிலம் வாங்குவதற்கு சொல்லுதல்.

பயிர்செய்வதற்குப் பச்சமுடனிப்போது
நிலம்வாங்கவென்று நினைத்துயென்னைக்கேட்பமென்று

உறுதிதிறங்கேட்க உத்தமனேவந்தாய்நீ
வாங்கலாமென்று மனதில்நினைத்துவந்தாய்
நஞ்சைபுஞ்சைதன்னை நானும்போய்ப்பார்த்துவந்தேன்
பிரையாசைஅதிகமென்று பேசவேனிப்போது
குறைவொன்றுமில்லை குறிப்பாகவாங்கிடலாம்
இன்னமொருகாரியந்தா னிருக்கிறதுயென்னுசான்
ஆடையுங்கோணடையும் அப்பாவிளைவதற்கு
கண்மாயில்தண்ணீர் கட்டலாமென்றேதான்
இடம்போய்த்தண்ணீ ரிருக்கயிட மில்லையடா
தண்ணீர்பெருகத் தாவில்லையென்னுசான்
ஆகையினாலே அப்போதைக்கப்போது
மழைபெய்யுங்காலம் வருகின்றதண்ணீரை
வைத்துப்பயிர்செய்து வருகிறாயாயென்னுசான்
நல்லதுனக்கு நலஞ்செய்துவைக்குகிறேன்
இன்னமனேகநில மிதுவோடுசேர்த்து வைப்பேன்
ஒன்றுக்குமஞ்சாதே உத்தமனேயிப்போது
கிரையமுடித்துவிடு கிட்டவேநானிருந்து
பயிர்செய்துவைத்துப் பார்க்குகிறேனென்னுசான்
அனுகூலஞ்செய்துவைப்பே னஞ்சாதேபோயிருந்து
விளைவுசரியாய் விளையும்படியாக
செய்துநான்வைத்துச் சிறப்பாகவைக்குகிறேன்

---

## வியாபாரம் செய்யச்சொல்லுதல்.



வியாபாரஞ்செய்ய வேணுமென்றுயென்னுசான்
ஆசானிடத்தி லதுவிபரங்கேட்பமென்று
மனதில்நினைத்து வைத்திருந்தாயிப்போது
வைத்துவியாபார்ம் வகையாய்நடத்திவந்தால்
எந்தவியாபார மினிசெய்வோமேன்றேநீ
சவுளிக்கடைதனையும் தான்பார்த்தேனிப்போது
வைத்துவியாபாரம் வகையாய்நடத்திவந்தால்
ஏராளமாய்லாப மிப்போகிடைக்குமடா
ஆகையால்நீயு மன்பாய்ஜவுளிகளை

வாங்கிவியாபாரம் வகையாய்நடத்திவந்தால்
என்குடும்பத்திற்கு மெனக்குமேபோதுமட்டும்
வேண்டும்வரும்படிகள் விருத்தியதாகவேதான்
செய்துவைக்கிறேன்நீயும் செய்குவாயிப்போது
பலசரக்குவியாபாரம் பண்ணலாமென்றேதான்
கடையைப்போய்ப்பார்த்தேன் கடுகளவுதோணவில்லை
தேங்காய்பழங்கள் இறலாகவிற்பமென்றும்
சாப்புச்சாமான்முதலாய் சகலமுலவத்தேதான்
காயிதச்சம்மந்தமுதல் கனகரெத்தினவியாபாரம்
குங்குமம்விபூதி கூடிமிகவிற்றாலும்
நவதானியக்கடையை நான்வைப்போமென்றேதான்
நெல்லுக்கடைபார்த்தேன் நிறைந்தமண்டியைப்பார்த்தேன்
இரும்புக்கடையை யேரிட்டுப்பார்த்தேனான்
மனதுக்குத்தோணவில்லை வந்துவிட்டேனென்னுசான்
தகரக்கடையைத் தான்போய்ப்பார்த்தேனான்
யெண்ணெய்க்கடைபார்த்தேன் இருட்டாகத்தோணுதிப்போ
பூக்கடைவியாபாரம் போய்ப்பார்த்தேனிப்போது
பொடிக்கடையாய்த்தோற்றுதென்று போயிக்குவந்தேனான்
சவுக்கக்கடைப்பக்கங் காலெடுத்துவைக்கவில்லை
காய்க்கடையில்லாபங் காணலாமென்றேதான்
எண்ணியிருக்கின்றேன் யென்னுசான்கத்தாதே
எந்தமுகம்போனாலும் தங்கமுகமாயிருந்து
செட்டினிலேலாபஞ் சிறப்பாகநான்தாரேன்
நல்லதொருநாளில் நானிருந்துஉந்தனுக்குக்
கடைவைத்துத்தாரேன் சம்பையின்தீர்மானம்



## விஷந்தீரச் சொல்லுதல்

குழந்தைக்குநேர்ந்த கொடுமைமிகச்சொல்லுகிறேன்
மலையிலேசென்று வரும்பொழுதுயென்னுசான்
காட்டுவழியாகக் கடந்துவரும்போது
செடியுங்கொடியுஞ் சேர்ந்தவிடந்தனிலே
காலில்சுருக்கிடவுங் கண்டேனுநேனுர்வசனம்

என்னவென்றுசொல்லி யென்னுசான்கேட்டாய்நீ
சர்ப்பமொன்றுபோலத் தானங்கிருந்திடவும்
வாயாற்கடித்ததுபோல் மலைகண்டேனோர்வசனம்
ஆனாலுமின்னமொரு ஆச்சரியமெத்தவுண்டு
பலவிதமான பாம்பாயிருந்தாலும்
சில்லுவிஷங்கள் சிறிதாயிருந்தாலும்
பலவிதஜெந்துவிஷம் பாங்காயிருந்தாலும்
மலையைவணங்கி வருகின்றதீர்த்தமதில்
குளித்துமுழுகக் கொடியவிஷந்தான்தீர
புலியூருச்சித்தனை நீ புந்திதனிலேநினைந்து
தீர்த்தங்குடித்தால் தீர்ந்துவிடுமிந்தவிஷம்
மயங்காதேயென்னுசான் மலைமேல்பழிபோட்டு
ஆகையால்யென்குழந்தை அடிமைமயங்காதே
விஷத்தையிறக்கி வேண்டுஞ்சுகந்தாரேன்
மலைக்குப்பணமொன்று வகையாய்முடிந்துவிடு
நானிருந்துதீர்க்குகிறேன் நலமாகவிப்போது
சுகமுங்கொடுக்குகிறேன் துன்பம்விலக்குகிறேன்
இந்தாபிடிசாம்பல் யென்குழந்தைக்கிப்போது
கொண்டுபோய்ப்போட்டவுடன் குழந்தையெழுந்திருப்பான்
குலதேவதைக்குக் கொடுப்பாயொருபணத்தை
மஞ்சள்துணியில் வகையாய்முடிந்துவிடு

---

## பாலகனைப் படிக்கவைக்கச் சொல்லுதல்.



குழந்தைபடிக்கவைக்கக் கோரிவந்தாயென்னுசான்
வயதஞ்சுமாகி மாதமுமீறுகிப்
படிக்கத்திறமையுள்ள பாலகனுக்கிப்போது
மகனைப்படிக்கவைக்க மனமகிழ்வாயிப்போது
திட்டமுடன்சேழ்ப்பமென்று திடங்கேட்டாயென்னுசான்
இன்னமொருசேதி யெண்ணியிருக்கின்றாய்நீ
சொல்லத்தான்வேணுமோ சொல்லுகிறேன்கேளாசான்
வாசிப்புத்தனும் வருமோவாராதோஉன்
கோரிக்கைதானுங் குறிப்பறிந்தேனோர்வசனம்

நாலுவேதங்களுந்தான் நன்ருய்ப்படித்திடுவான்
ஒன்றுக்குமஞ்சாதே உத்தமனேநீதானும்
ஏழாமாதத்தில் யென்குழந்தைதன்னையுமே
வாசிக்கவைத்து மகனேநீதான்பார்த்தால்
எல்லாப்படிப்பு மென்பிறவிதான்படிப்பான்
யோசிக்கவேண்டாம் உத்தமனே நீதானும்
காணிக்கைக்கோர்பணமும் கையால்முடிந்துவிட்டு
தைமாதத்தில் தவருதுபள்ளியிலே
வைத்துவிடவேண்டும் மன்னனுடகையாலே
வாத்தியாருக்கு மனதாரவிப்போது
தெட்சணையும்வேட்டி தேங்காய்பழத்துடனே
வைத்துக்கொடுத்து மகனேப்படிக்கவைப்பாய்
குழந்தைமயங்காதே கூடவேநானிருந்து
வாசிக்கவைத்து மனப்போலப்பார்க்குகிறேன்
இந்தாவிபூதி யென்ஞ்சான்நீவாங்கு
வாக்குத்தரவேணும் மனமகிழ்வாயிப்போது
சரஸ்வதியேவாக்குத் தரவேணும்எந்தனுக்கு
பாதாரவிந்தம் பணிந்தேன்சிறுவனுமே
அனுசரனையாக அடியேனேக்காருமம்மா
குழந்தைக்குவந்த குறைசொல்வேன்கேளாசான்

---

## குழந்தை பயந்தவிஷயஞ்சொல்லுதல்.

———:(※):———

என்பிறவிகூட யென்குழந்தையுந்தானும்
வழிப்பயணம்போகையிலே மாதுநல்லாள்பெண்கொடியாள்
பணியாரஞ்சுட்டுப் பாதைதனில்விற்றாள்காண்
வித்தபணியாரமதை வேணுமெனயென்குழந்தை
வாங்கிக்கொடுத்தாள் மடியில்குழந்தைவைத்து
பணியாரங்கொண்டு பாதைவழிபோம்பொழுது
வங்கொலையாய்மாண்ட மனுவனொருவன்துயர்ந்து
பணியாரத்தைப்பிடுங்கப் பாலகனுமேபயந்து
பெற்றுளிடத்தில் பேணியுரைத்ததையும்
சற்றும்மினையாமல் தான்போனுள்ஊருகே
அன்றேதுயர்ந்தவனை யாரென்றும்பார்க்கவில்லை

ஆனதினுலென்குழந்தை அன்றுமுதலின்றளவும்
மாண்டபயல்கோட்டாலை வருத்தமிகஉண்டாசான்
கனவினிலும்வந்து கத்தினுனுண்மையுடன்
அவன்குறையேயன்றி யல்லாதுவேறுமில்லை
ஆலமாத்தி லவனிருக்கும் யெல்கையிலே
பணியாரம்தோசை பலகாரவர்க்கமுடன்
அஞ்சுபணம்வைத்து அருமையுடன்படைத்தால்
இன்றேயொழிந்துவிடு மிப்போசுகங்கொடுப்பேன்
ஆரக்கட்டியிப்போது அடியேன்சாம்பல்தாரேன்
வாங்கியேசென்று மறுவாரம்வந்திடுவாய்
சகலசுகமுந் தான்கொடுப்பேனஞ்சாதே
காகம்பறவாமல் காப்பாத்திநான்தாரேன்
குழந்தைபடுத்தவிடம் குணப்பிசகானவிடம்
ஆகலாலிப்போ தந்தஇடத்தைவிட்டு
வேறேயொருவிடத்தில் விரிப்புகளைவிரித்து
குழந்தையைப்போட்டால் குணப்பிசகுதீர்ந்துவிடும்
மயங்காதேயென்னுசான் மாசில்லாமற்காப்பேன்

---

## சாமிகும்பிடாததினுல்வந்தகுறையைச் சொல்லுதல்

வருடர்வருடம் மாம்பழப்பூசையினில்
பொங்கலும்வைத்துப் புதுமையுடனேதான்
முப்பழப்பூசை முறையுடனேதான் போட்டு
தழுகைமுதலாகத் தானடத்திவந்தாய்நீ
அதினுற்குறைகளுண்டா அப்படியெல்லாமிருக்க
இரண்டுவருடமதா யென்னைநினைத்தாயா
கும்பிடவேண்டுமென்ற குறிப்பையறிந்தாயே
உன்காரியங்க ளுனக்குப் பெரிதாச்சு
என்காரியத்தை யான்பார்த்தேனிப்போது
குறைவந்தபின்பு குறிப்பறியவந்தாய்நீ
கொட்டினுல்த்தேளென்றும் கொட்டாமல்விட்டுவிட்டால்
பிள்ளைப்பூச்சியென்ற பெருங்கதைபோலாச்சு
ஆனதாலுந்தனுக்கு அறிக்கைசெய்தேனேர்வசனம்

பூராவுஞ்செய்த புதுமையறியாய்நீ
போனவருடத்தில் புஞ்சைநஞ்சைவேளாண்மை
ஏதேனுங்கால்ப்படிநீ இட்டுவந்தாயா சொல்லுநீ
நஞ்சையினில்கோளாக நன்றாய்த்தெரிவதற்கு
வெங்கினியாய்த்தான்பரிந்த விதந்தெரியமாட்டாய்நீ
களத்திலதிரு கனிசங்கிடைத்ததுண்டா
நெல்லடித்துப்போட்டாயே நெல்லிலேராசியுண்டா
வீட்டில்சுகமுண்டா மிகுந்தகுழந்தைகட்கு
சவுக்கியமேதேனுமுண்டா தன்பாடுக்ஷேமமுண்டா
வியாபாரஞ்செய்தாயே விருத்தியேதேனுமுண்டா
இதுவெல்லாமென்னவென்று எண்ணிநீபார்த்தாயா
ஆனதினாலுனக்கு அறிவுவரும்படியாய்
சொற்பனத்தில்வந்து சோதித்தறிந்தேனான்
கால்முடக்கமானபின்பு கருத்துவந்ததென்றான்
தெரியாதிருந்தனென்று செப்பவந்தாயென்னிடத்தில்
தெரியாதுயிர்போனால் திரும்பிவருமோடா
மன்னிக்கவேணுமென்று வார்த்தைசொன்னாயிப்போது
மன்னித்துக்கொள்ளுகிறேன் வருடமிதில்நீதானும்
கையெடுத்துக்கும்பிடவும் கருதுவையாயென்றான்
ஆகட்டுமென்ற தாசரிதானிப்போது
தெக்ஷணத்தைநீயுஞ் சேர்ந்தபங்காளிகளும்
மூன்றுதடவை முக்காலும்தான்விழுந்து
கும்பிட்டெழுந்து குறைதீர்ந்திடுவதற்கு
மஞ்சள்துணியில் வகையாயொருபணத்தை
முடிந்துவிட்டுயெந்தன் முன்பாகக்கையெடுத்தால்
சகலமுந்தீர்த்துத் தருகிறேனென்றான்
இனிமேல்மயக்கமில்லை யெள்ளளவுமஞ்சாதே
முள்ளுமுறியாமல் முடிக்கபூவாடாமல்
காகம்பறவாமல் காப்பாற்றிநான்காரேன்
இவ்வருடம்வேளாண்மை யேறிட்டுப்பார்க்குகிறேன்
காந்துத்தருகிறேன் கைபோட்டுச்சொல்லுகிறேன்
என்சாம்பல்தன்னை யென்றான் வாங்குவைநீ
இன்னமொருசேதி யியம்புகிறேன் கேட்டருள்வாய்
உன்தகப்பன்கூட உறவாகவேபிறந்த

பங்காளிக்கேதேனும் பாரில்சுகமுமுண்டோ
மண்ணடித்துப்போட்டேனே மயங்கிக்கிடக்குகிறான்
அவனுவதென்னே யணைத்துப்பிடித்தானு
இருக்கட்டுமிப்போ யெல்லவருந்தான்சேர்ந்து
கம்பையில்வந்து கெயெடுத்தால்நற்சுகத்தைக்
கொடுக்கிறேனென்னுசான் குறைவுவரமாட்டாது



## சாமிகும்பிடத் தவறிப்போனதைச் சொல்லுதல்.

நல்லதிருக்கட்டும் நான்சொல்லுவேன்கேளாசான்
எல்லவருஞ்சேர்ந்து யென்னுலேயவாசல்
கம்பையிலேவந்து கையெடுப்போமென்றேநீ
வருகிறவெள்ளி வாரமதில்நாள்பார்த்து
கும்பிடுவதென்று குறிப்பிட்டிருந்தாய்நீ
அதுபோலவந்து அடவாக்கும்பிட்டாயா
உனக்குஅனேகம் ஊருகளில்சோலியுண்டு
போகட்டுமிந்தப் புதுமைத்தினத்தினிலே
வாங்கினசாமானே வைத்துப்படைப்போமென்று
கோரிவந்தாயென்னிடத்தில் குறிப்பறிந்தேனோர்வசனம்
பூசாரிதானும் போயினுனூர்தனக்கு
ஆசானீயென்று அல்லவருந்தானறிய
நேமித்திருக்க நெடுகலுநீயெந்தனுக்கு
பூசைபுரிந்தாயா போனவருடம்போலே
கையெடுத்துநீயுங் கனபிரியமாகவுமே
ஆசாணைவைத்தால் அப்பனேவுன்குலத்தைக்
காத்துவருகின்றேன் காரியமும்சித்தியதாய்
பார்த்துவருகின்றேன் பதறுதேயென்னுசான்
முன்வாங்கினசாமான் முற்றிலும்நீதள்ளிவிட்டு
வேறுசாமான்கள் விரைவினிலேதான்வாங்கி
காரியத்தைநீநடத்து காப்பாத்திவைக்குகிறேன்
இனிமேலிதுபோலா யிராதேநீயென்னுசான்
வருடாவருடம் வருமுன்னேகையெடுக்க

பிரயத்தனம்புரிந்து பேணியேகையெடுப்பாய்
தருவேன்சுகங்கள் தவறாமலிப்பொழுது

---

## மனையாள் பயந்ததைச் சொல்லுதல்

உன்வீட்டில்வந்த உத்தமியாள்பெண்ணானங்கு
இராத்திரியிலேவெளியில் நலமாகப்போம்பொழுது
சுடலையுருவந் தோற்றினதைக் கண்டுமங்கை
கண்டுபயந்தாள் காய்ச்சல்மிகவுண்டாகி
அன்றிரவில்வாய்குழறி அனந்தவிதமான
சொற்பனமுங்கண்டு துயரமிகவுண்டாகி
அன்றுமுதலின்றுவரை ஆகாதசொற்பனமும்
காய்ச்சல்குளிருங் கண்டேனானென்னாசான்
இந்தக்குறைதவிர இன்னமொன்றிருக்கிறது
சொல்லத்தான்வேண்டுமோ சொல்லென்றால்சொல்லுகிறேன்
முந்தாநாள்சந்திற் முதற்சாமவேளையினில்
போய்நுழையும்போது பொன்கருப்பனங்குநிற்க
கண்டுதிடுக்கிட்டுக் கவலையடையும்போது
ஆத்தாளாமெங்கள் ஆவுடைநாயகியும்
ஓடிவந்துகைபிடித்து உடனேவருந்தியவள்
வேண்டினதினாலே மிகமறைந்தான்பொன்கருப்பு
அதினாலொருதோஷ மப்பனேயில்லையடா
மாதுக்குநேர்ந்த வருத்தமதுதீருதற்குச்
சுடலைக்கிப்போது செர்குசானபூசைதனை
செய்துமுடித்தால் தீர்க்கிறேனிக்குறையை
இன்னமொருவார்த்தை இருக்கிறதுசொல்லுகிறேன்
தெட்சணம்பூமி திருநெல்வேலிநன்னாடு
போய்வருகும்போது புன்னைவனக்காட்டினிலே
சாமிதெரிசனைகள் தான்செய்யும்போதினிலே
கிரிபுறத்தில்கோடு கீறிவிழுவனென்று
பிரார்த்தனைகள்செய்ததுவும் பிந்திநினைக்கவில்லை
சங்கரநாராயணர்க்குந் தனிக்குறையொன்றேயிருக்கு
அதையும்நிறைவேற்றி ஆவுடையைப்போற்றிசெய்தால்

இதுவேகுழியா யிருந்துபத்துத்திங்களிலே
சுதனையும்பெற்றுச் சுகமாகவேயிருப்பாள்
இந்தாபிடிசாம்பல் என்றுசான் வாங்குவாய்நீ

---

## பலவிதச் செய்கைகளைச் சொல்லுதல்

வீட்டில்வருத்தம் விகசிதமாய்ச் சொல்லுகிறேன்
வீடுவிட்டுத்தானும் வேறுயிடத்தினிலே
கசிவுநீகொண்ட கருத்தறிந்து உன்மனைவி
நயினார்கோவில் தனக்கு நலமாகப் போகையிலே
சாமியிடத்திற் றுன்சொல்லி மண்வாரி
தூத்தினதுபோதாமல் சொன்னாள்பலவிதமாய்
அன்றழுதவின்றவரை அழுதகண்ணுஞ்சிந்தையுமாய்
கையெடுத்ததெய்வங் கணக்கில்லையென்றுசான்
ஆனதினாலுனக்கு ஆகாதசொர்ப்பனமும்
தேகசுகமில்லாமல் செய்ததினாலிங்குவந்தாய்
காமாட்சிகோவிலுக்குக் கடாவொன்றுநேர்ந்துவிட்டாய்
நேத்திக்கடனை நீசெலுத்திவைத்தாயா
வைக்கவில்லையென்று வார்த்தைசொல்லவந்தாய்நீ
மதிமறந்துபோனாயா மாய்கைமறந்திட்டனவா
மறுவருடம்நீயும் மனையாளுடனேதான்
கோவிலுச்குவந்தாயே கூடித்திரிந்தாயே
ஏனென்றுந்தேடினையா இதுதானிருக்கட்டும்
மங்கையொருத்தி மனவாட்டக்காரியவள்
குற்றம்வந்ததென்று குறிசொன்னேனென்றுசான்
அவளாரெனவே அறியவேசொல்லுகிறேன்
முன்னமிவள்தானும் மோடியதாகவேதான்
போக்குவரத்தாயிருந்து போனசினேகிதத்தால்
பிரியமிருக்கு பிணக்குவந்துசேர்ந்ததினால்
இருவருமேசண்டையிட்டு யென்னாலயவாசல்
முன்னாகவந்து முறையிட்டாள்பெண்ணனந்த
அப்பால்வெகுநாளா யவனைமிகமறந்து
இருக்குந்தருவாயி லெப்படியோவொன்றாக

கலந்துயிருந்தார்கள் கன்னியுமாசானும்
தெய்வத்தின்சாபம் தெரியாது மன்னனுக்கு
மண்ணயிலுஞ்சேதம் வான்பயிர்களுஞ்சேதம்
கைப்பொருளுஞ்சேதம் கனபாடுபட்டதொரு
நாலுகால்சீவன் நடமாடுஞ்சீவனிலும்
ஆடுமாடுஞ்சேதம் ஆசானுக்கிப்போது
தேகசௌக்கியமும் சிறப்பானபூஷணமும்
எதுதான்சுகமென்று யெண்ணுகிறாயென்னுசான்
இன்னமொருவார்த்தை யியம்புகிறேன் கேளாசான்
ஓரியதாகஉயர்ந்த மனிதனவன்
உன்னுடையகாரியத்தில் உதவிமிகச்சொல்லுகிறேன்
தேடிவந்துபார்த்து செய்யாதுசெய்துவிட்டுப்
போனதுபோல்சொர்ப்பனத்தில் பொன்மலையுங்கண்டேறன்
ஆனதிருக்கட்டும் அடவாயுடன்வீடதனில்
பட்டதொருகருப்புப் பாண்டிமுனியுடன்
சனிமூலைப்பக்கத்தில் சதிராகநிற்குதங்கே
நச்சுக்கெவுளியொன்று நாள்தவறாமலேதான்
கத்துகிறதென்னுசான் கதைசொல்வேனஞ்சாதே
இந்தக்கருப்புகளை இப்போதுநான்விரட்டி
சுகந்தாரேனென்னுசான் சூதுவாதொன்றுமில்லை
மயக்கமினிவேண்டாம் மறுவாரந்தன்னிலேதான்
நச்சுக்கெவுளிதன்னை நானடித்துத்தான்விரட்டி
கருப்பும்விலகிக் காப்பாத்திநான்தாரேன்
இந்தாவிபூதி யென்னுசான்வாங்குநீ
சொன்னதுனக்குத் தோணலையாயென்னுசான்
வைத்தகுறிக்கு வழக்குண்டோகேளாசான்
சித்தமறியச் செப்புவேன்தீர்மானம்
இல்லடம்பூமி யிருக்கும்பதிவுதனில்
மாராட்டஞ்சொர்ப்பனமும் வல்வினையும்பிடைகளும்
எதினால்வந்ததென்று யென்னைக்குறிகேட்டாய்நீ
சீவனைநாடித் திடங்கேட்டாயென்னுசான்
சீவனென்றால்மேவண சீவனுண்டுபூவுலகில்
மனிதருடசென்மம் வகையாயெடுப்பதிலும்
கூன்குருடுசெப்பாணி குணக்கேடுதானீக்கி

ஆண்சென்மமாவ தரிதாம்புவிதனிலே
பெண்சென்மமாகப் பிறந்துமேபூவுலகில்
என்னபலனடைந்தார் யென்னாசான்சொல்லுவையா
ஆடுயாடென்று அடிமைசொல்லவில்லையிப்போ
சீவன்திடம்உறுதி சேர்ந்தனைக்ஷேத்திரமொடு
பூவில்வழங்கும் பொருளாகுமென்னாசான்
யென்னபொருளென்று யென்னைக்குறிகேட்டாய்நீ
கம்மாளர்செய்த கனபணிதியென்றுசொல்லி
சும்மாநாலுன் மனதைச் சோதித்தேனிப்போது
ஆனதினாலுந்தனக்கு அடவாகச்சொல்லுகிறேன்
காசென்றுசொல்லி கதறினதுதோணலையா
என்னகாசென்று யென்னைமறுத்துக்கேட்டாய்
சொல்லத்தான்வேண்டுமோ சுகமாகச்சொல்லுகிறேன்
பாடுபட்டுத்தேடிப் பணத்தைமிகச்சேர்த்து
கொடுத்துவைத்தவிடத்தில் குறைவந்ததென்னாசான்
அவனொருதோஷம் அன்பனேயில்லையடா
ஒருமாதந்தன்னி லுன்பணத்தைத்தந்திடுவான்
மயங்காதேயென்னாசான் வாங்கியேநான்தாரேன்

---

## சுவாமி இருக்குந் திசை சொல்லுதல்



மலையைவணங்கி மால்கண்டேனோர்வசனம்
யென்னாலயவாச மிருக்குமிடந்தானும்
சொல்லிவிடவேணுமோதான் சொல்லுகிறேன்கேளாசான்
திசைநான்கும்பார்த்துத் திரும்பியிந்தத்திசையை
நோக்கினேன்வல்லசித்தன் நோன்புதனைப்பார்த்து
சாலைவழிகூடித் தான்சென்றேனைங்கரனார்
ஆலயமுந்தான்கடந்தேன் அய்யனார்கோவிலையுங்
கண்டுவழிநடந்தேன் கருப்பனுடகோவிலுக்குள்
நுழைந்தேனவனை நண்ணிதமாய்த்தான்கூட்டி
நீரோடும்பள்ளம் நிலையானபூஞ்சோலை
உள்ளேநுழைந்தேன் ஒருவரையும்நான்காணேன்
கொண்டியொருவச் நோன்புவிரதத்தோடு

சப்பாணியாய்த்தவிழ்ந்து தான்திரிகிறானவனை
கைப்பிடித்துச்சென்று கரையோரம்போனேனான்
வங்கொலையாய்மாண்ட மாரியம்மாள்தனையும்
கண்ணாலேகண்டேன் காவல்பதனமென்றேன்
ஆற்றைக்கடந்து அக்கரைபோய்ப்பார்த்தேன்
கரையோரமாகக் கடந்தேன்வெகுதூரம்
பேச்சியைப்பார்த்தேன் பிணம்பிடுங்கிக்கொண்டிருந்தாள்
ராக்குமுத்துப்பேச்சி ரணவீரிகாளியம்மை
ஓங்காரரூபி உமையாளைக்கண்டுகொண்டேன்
தண்ணீருஞ்சோலை தழைத்தவடவால்விருக்ஷம்
நாலுதிக்குங்கவிந்து நன்றாயிருந்ததங்கே.
இருந்துஇளைப்பாறி யென்றசானைப்பார்த்தேன்
வேட்டைக்குப்போய் விருதுடனே அங்குவந்தேன்
பொன்கடலைவந்து புகுந்தானன்னேரமதில்
இருளனெங்கேயென்று யென்னிடத்திலேகேட்டாய்
காண்பிக்கிறேனெனவே கைப்பிடியாகப்பிடித்து
மலையையெதிர்நோக்கி வருகின்றநேரமதில்
கோவிலையுங்கண்டு குறிப்பறிந்துகொண்டேனான்
இருபத்தொருபந்தி யெல்லைக்கதிகாரி
தெய்வேந்திரஉடையார் தெரிசனமுங்கான்பார்த்தேன்
சத்தகன்னிமார்கள் தானங்குநீராடி
நந்தவனத்தில் நறுமலர்கள்தானெடுத்து
பூக்குடலைதூக்கிப்போகுமந்தவேளையிலே
ஆச்சியிருளு அலறியேசத்தமிட
மாரியம்மன்கோவிலுக்குள் வந்துநுழைந்தார்கள்
ஆவுடையம்மாளை அப்போதுநான்பார்த்தேன்
மாடனுடகோவில் வாசல்வழிபோகையிலே
சாத்தானும்வந்து தானெதிரில்நின்றான்காண்
மேகலிங்கம்உடையார் வெகுவேகமாகவேதான்
சவ்வாரிபோயித் தான்வந்தாரன்னேரம்
முனியாண்டிகோவிலுக்கு முன்பாகவந்தேனான்
சக்கமாதேவி தான்வந்தாளன்னேரம்
பொன்னையாவெங்கேயென்று போய்ப்பார்த்தேனப்போது
வேட்டைக்குச்சென்று விருதுடனேவந்தான்காண்

அழகனெங்கேயென்று அவ்விடம்போய்ப்பார்த்தேனுன்
நயினுரிருந்தார் நம்வரவைத்தான்பார்த்தார்
இருளாயிகோவிலையும் எரிட்டுப்பார்த்தேனுன்
முத்தையாசன்னதியில் முன்பாகவந்துநின்று
சாமிதெரிசனைகள் தான்செய்தேனென்னுசான்
மறத்திமகன்வன்னியனே வணங்கிவந்தேனிப்போது
சொன்னகுறியுமக்குத் தோணலையாயின்னேரம்
நல்லதிருக்கட்டும் நான்பார்த்துச்சொல்லுகிறேன்

---

## எல்லை குறித்துச் சொல்லுதல்.

ஆத்தோரம்
மலைமேல்
ஆலமரம்
மாந்தோப்பு
தென்னந்தோப்பு
பனையடி
கரையோரம்
மையவெளி
சிகரமுள்ளது
கோபுரவாசல்
கண்மாய்க்கரை
பூந்தோட்டம்
ரோட்டுப்பாதை
சாலைவழி
உள்ளோரம்
பாதைவழி
வீட்டுக்குள்
சகலருக்குந்தெரியும்
நந்தவனம்
அரசடி
தென்னந்தோப்பு
புளியந்தோப்பு
மலைவாசல்
இளந்தோப்பு
சுத்தி திருமதிலுள்ளது
கவ்வலடி
மாவடி
மந்தையில்
ஊரில்
புஞ்சையில்
வயலில்
மயானக்கரை

இன்னவிடமென்று யென்னைநீகேட்டாயே
சொன்னதுமக்குத் தோணலையாயின்னேரம்
என்னவூரென்று யென்னைமறுத்துக்கேட்டாய்
சொல்லத்தான்வேண்டுமோ சொல்லுகிறேனிப்போது
எட்டுத்திசைகளையும் யேறிட்டுப்பார்த்தேனுன்
வழியோதெரியவில்லை மயக்கமினிவிட்டுவிடு

## ஊரின்பேர் சொல்லுதல்.

———()———

| | |
|---|---|
| கருவூர் | புதுப்பட்டி |
| முதுகுளத்தூர் | புளியம்பட்டி. |
| மணலூர் | பொம்மக்காபட்டி |
| திருச்செந்தூர் | கல்லுப்பட்டி |
| பரத்தூர். | காட்டுப்பட்டி |
| சேத்தூர் | கட்டையன்பட்டி |
| திண்டோர் | கவண்டன்பட்டி |
| சின்னமனூர் | விருதுபட்டி |
| பார்த்திபனூர் | விளாம்பட்டி |
| பள்ளத்தூர் | மேலப்பட்டி |
| அலங்கானூர் | மேட்டுப்பட்டி |
| அயிலானூர் | முத்துப்பட்டி |
| ஆதனூர் | சிட்டம்பட்டி |
| ஆப்பனூர் | சிலுக்கார்பட்டி |
| ஆலாத்தூர் | வடக்கம்பட்டி. |
| ஆவியூர் | வள்ளாளபட்டி |
| ஆத்தூர் | பொய்யக்கரைப்பட்டி |
| கண்ணனூர் | வடுகபட்டி |
| நல்லூர் | இடையபட்டி |
| நாலூர் | உசிலம்பட்டி |
| கோட்டூர் | ஊத்துப்பட்டி |
| கொடுமலூர் | வாடிப்பட்டி |
| திருப்பத்தூர் | தாதன்பட்டி |
| பிஸியூர் | தேத்தாம்பட்டி |
| தேனூர் | தேவதானப்பட்டி. |

சொன்னவிபரங் தோணலையாயென்றுசான்
ஊரின்னதென்று ஊரறிந்துகொண்டாயா
பேரின்னதென்று பிரபலமாய்ச்சொல்லனுமா
தெரியும்படியாகச் செப்புகிறேன்தீர்மானம்

## தெய்வங்களின் பெயர் சொல்லுதல்

சங்கரன்
நீலகண்டன்
சிவப்பிரகாசன்
தெய்வநாயகன்
சொக்கலிங்கம்
சோமசுந்தரம்
நமசிவாயம்
நாகலிங்கம்
கல்யாணசுந்தரம்
மாயவன்
வெங்கிடசாமி
நாராயணன்
கோவிந்தன்
நரசிங்கம்
பெருமாள்
இராமசாமி
கிருஷ்ணன்
தெய்வேந்திரன்
கணபதி
முருகன்
வேலாயுதம்
ஆறுமுகம்
கந்தன்
குமரன்
குருசாமி
சண்முகம்
முத்தையா
வடிவேலு
முத்துச்சுவாமி
சுப்பிரமணியன்.
கருப்பன்
மாடசாமி
இருளப்பன்
சுடலைமுத்து
பெரியமாடன்
சோணை
வீரணன்
முனியாண்டி
வீரன்
ஆண்டியப்பன்
வெள்ளையன்
பிச்சாண்டி
அய்யனார்
இருபத்தொருபந்தி
கருக்குவாலையன்
சந்திவீரப்பன்
அநுமான்
கலிதீர்த்தய்யன்
சாத்தான்
நாகப்பன்
சுந்தரம்
கோட்டைமலையான்
இரட்டைமலையான்
ஏழுமலையான்
வயித்தீஸ்வரன்
அழகராஜன்
விளங்கன்
குப்பையாண்டி
வன்னியன்
மேகலிங்கம்

ஆத்தாள்பெயரை அரையுகிறேனென்றுசான்
மயக்கமினிவேண்டாம் மயங்காமற்சொல்லுகிறேன்
தெய்வத்தின்பேரைத் திடமாயுரைத்துவிட்டேன்
பெண்தேவதைப்பேரைப் பேசுகிறேனென்றுசான்

---

## பெண்தேவதைகளின்பெயர்சொல்லுதல்.



| | |
|---|---|
| சந்தனமாரி | நாகம்மா |
| மாரியம்மை | முத்தம்மா |
| காளியம்மை | சுப்பம்மா |
| மீனாக்ஷி | குப்பம்மா |
| சுந்தரி | கருப்பாயி |
| அம்பிகை | வெள்ளையம்மா |
| காத்தாயி | லெட்சுமி |
| சாத்தாயி | ருக்குமணி |
| முருகாயி | துரோபதை |
| மூக்காயி | பொம்மியம்மா |
| இருளாயி | நம்பியம்மா |
| ராக்காயி | வன்னிச்சி |
| மின்னாயி | வள்ளியம்மை |
| ஆவுடை | தெய்வானை |

பெண்தேவதையின் பேரறிந்துகொண்டாயா
இன்னமொருகாரியத்தை யெண்ணிக்குறிவைத்தாய்நீ
சொல்லுகிறேன் கேளாசான் சோதனைகள்போலவேதான்
பாவினிலுஞ்சோரம் பால்சுரக்குங்காம்பினிலும்
ரெத்தமயமாக விருக்குதுபால்களெல்லாம்
அத்தக்கினவும் அதிரடியுஞ்சொர்ப்பனமும்
நச்சுக்கெவுளிகளும் நன்றாயுரைக்கிறது
கால்கைசுகமில்லாமல் கவலையுற்றிருப்பதுவும்
என்னவென்றுகேட்பமென்று யென்னிடத்தில்வந்தாய்நீ
ஒருகுலைக்காயினிலே ஒட்டிப்பிறந்ததொரு
பெண்கொடியாளுக்கும் பிறவிக்குஞ்சண்டைவந்து
திட்டித்திமிரி சேர்ந்துபின் ஒன்றாக
கலந்ததினால்குற்றம் காண்கிறதுஎன்னாசான்
சினந்தருத்தமூக்கு சிரித்தவுடனேவருமா
ஆகையாலென்னாசான் அடிமைக்குச்சொல்லுகிறேன்
உற்றார்பகையும் ஊர்பகையுமெத்தவுண்டு
இந்தக்கலாதிகளும் எதினால்வந்ததென்றால்
உன்வீட்டுமூலையினில் ஓரமாய்உள்ளவன்தான்
ஊரமல்லகாதமல்ல சுகியுறவாய்க்காண்கிறது

உள்ளுக்குள்தானிருந்து வனமேபண்ணுகிறான்
சிவலிமனிதனொருவன் சேர்ந்துநடத்துகிறான்
இந்தஇடையூறு தீரவேசொல்லுகிறேன்
உங்கள்தெய்வத்தைத்தொழுது திருநீறுதானணிந்து
கணிகாரனாலே கறுப்பைக்கட்டிநீக்கிவிட்டால்
வந்தபிசகு வல்வினையுந்தீர்ந்துவிடும்
நினைத்ததொருகாரியங்கள் நிச்சயமாய்க்கைகூடும்
மாயன்பெருமாள் வரம்பெற்றதென்மதுரை
தொட்டியத்துலாடன் துள்ளுகுட்டிவீரையனும்
பக்கந்துணையிருந்து பிரபலமாய்க்காப்பார்கள்
மாரிபொழியும் மக்களுமுண்டாகும்
இனிமேலுமச்சங்கள் ஏதுக்குவென்றுசொல்லி
வீரபத்திரசுவாமி விளம்பிகிறார் புள்ளியங்கே

மீனராசியின் பலன் முற்றிற்று.

---

## பன்னிரண்டுராசி முத்துக்குறிபார்க்கிற

# ஆருட சாஸ்திரம்.



தாமரை முத்துகள் பன்னிரண்டில் ஒருமுத்துக்கு மட்டும் வெள்ளிப்பூப்பிடித்து வைத்துக்கொண்டு குலுக்கி நவக்கிரஹதேவதை ஆராதனை செய்து கம்பிளிவிரித் ததன்மே லுருட்ட மேற்கூறிய வெள்ளிப் பூப்பிடித்த இராஜ முத்தானது எந்தப் பக்கத்தில் நிற்கிறதோ அதையே லக்கினமாகக்கொண்டு பலன்சொல்ல வேண்டியது.

முதலாவது

### மேஷ ராசி உதயமானால்.

மேஷம்:—ஆடு, நாலுகாற் சீவன் கோரிய காரியம் குணமாகும் தெய்வம் திடம் உறுதி சீவனைக்கோரியது. களவுபோனது வரும் பொருளது கூடும். வழக்கு வெல்லும், பெண்களால் கஷ்டம், பூமி சேர்க்கை.

## கவி

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

ஆடெனு மேஷம் வந்தாற் கப்பனே யுதிக்கு மாகில்
நாடக மனையாண் மக்கள் நன்மையாய்ப்பலுகுங் கண்டாய்
தேடின பொருளுங் கையிற் சிக்குமே நிகர்சொ லொண்ணு
பாடருங் கீர்த்தியாயுள் பரவுவர் சரத மம்மா. (1)

நாட்டைவிட் டகன்றூர் மீள்வார் நதிக்கரை வயலுஞ் சேரும்
மேட்டிமை யுடனேவாழ்வும் மிகுந்திடும் பகைவர் சாவார்
வாட்டமுஞ் சிறிதுநாடா மன்னவர் பேட்டி கிட்டும்
வீட்டினில் மணமுங் கூடும் விரிஞ்சகன் விதியி தாமே. (2)

இல்லத்திற் சுகமே நாளு மெய்திடும் மனையு மக்கள்
நல்லவ ராகப் பூவில் நாயக மெனவே வாழ்வார்
கல்லதால் வீடு மேற்கே கட்டுவர்ய் காட்டும் யோகம்
தில்லையி னடனஞ் செய்த சிதம்பர னருளி னாலே. (3)

பந்துவின் சேர்க்கை ரெம்பப் பலிதமாம் மலநாட் டோட்டு
வந்ததும் பொருளி னாலே வழக்கது தோர்வை யுண்டு
தந்தன மோடுமன்னன் சடிதியில் வந்து சேர்வான்
சுந்தர நடன மாதர் சுகநிதங் கிடைக்கு மன்றே. (4)

முன்னமோர் பெண்ணாற் றீவை மூண்டிடுஞ் சுகுண மேற்ற
பின்னொரு பெண்ணா லின்பம் பெருகிடு மருமை வாய்ந்த
மன்னவன் பிறப்பன் ஆயுள் வளர்ந்திடும் வரவு மாகும்
பன்னகம் பூண்ட வீசன் பதமல ரிதயி தாமே, (5)

சென்றனற் பொருளுங் கையிற் சேர்ந்திட தனதித் தேயம்
நின்றுகை கடந்து போச்சு நிருபர்கள் நேசம் நேரும்
கன்றுடன் பசுவுங் காட்டிற் கட்டுட னேகி மீளும்
இன்னொரு விருந்தைக் காண்பா யிதுண்மை யறிந்து பாரே. (6)

இரண்டாம் வீடாகிய

## ரிஷப ராசி உதயமானால்

ரிஷபமென்பது பரமேசுரனுக்கு உகந்த வாகனமும் நாலுகாற் சீவனு மாகையால் கோரிய காரியம் தேவதையும் சீவனையும் சிந்தனை செய்தால் நலமாய் முடியும். நிறம் வெள்ளை கிழக்குத் திக்கு போன வன் தாமதத்தில் வருவான்

கவி.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

கருதிய கருமம் நன்றே கலைமகள் துணையென் றெண்ணு
பெரியதோர்லாபஞ்சேரும் பெருமைநுமிகவுண்டாகும்
உரியமாமனையுஞ்சாதி துண்மையாம்கம்புநீயும்
பெருமிதமுடையோனோராண் பிள்ளையையுடையோனுமே. (1)

தாழ்விலாமழையேபெய்து தானியவிளைவுமாகி
வாழ்வதுபெருகுமேசி மானெனப்புகழ்வார்பல்லோர்
காழ்மனத்துடையோர்நேசங் காட்டிடாதவனிமீதில்
சூழ்வினைப்படியேமுத்து முருண்டிடுமுவகைதானே (2)

அன்னியராலேதுன்ப மகன்றிடுமழகுவாய்ந்த
கன்னியராலேசீக்குக்கண்டுமெங் நிமிடம்நீங்கும்
உன்னியயாவுங்கைமே லுதவிடுங்குலதெய்வத்தாற்
பின்னமுமுண்டுபோகும் பேய்பில்லியில்லைமன்னு. (3)

பத்தினிதனக்குச்சோகை பக்கமாரடைப்புமேகம்
நித்தமும்வருத்தங்காணும் நீடித்தஆயுள்சாகாள்
சத்துருநாசம்வித்தை தான்பலித்திடுங்கணேச
அத்தனைதொழிலேநீங்கு மாமிதுதப்பாதப்பா (4)

கப்பலிலேறித்தூரங்கடப்பதற் கென்றுமெண்ணம்
தப்பதைமீறிச்செல்வித் றடையிலைமீள் வேயில்லை
அப்பன்றன்சொத்திற்கிஞ்சித் தடையவுமேதுமில்லை
சுப்பிரமணியன்போல் சுகமினியுண்டுதாமே. (5)

சோதரரிரண்டொன்றாமே துரைகள்நேசமுங்கைகூடும்
காதினில்ரோகங்கண்டக் கணமருந்தாலேதீரும்
வீதரும் விரோதராவார் வெகுஜனப்பகையுண்டாகும்
வேதியனொருவனாலே விளங்குமிக்குடியுமாதோ (6)

---

மூன்றும் வீடாகிய

## மிதுனராசி உதயமானால்.

வசனம்

மிதுனமென்பது பெண்ராசி கோரியகாரியம் பெண்வழியைச் சேர்ந்தது சீக்கிரம் ,கைகூடும் வியாதிதீரும் நஞ்சையில் வேளாண்மை பலிக்கும் வழக்கு வெல்லும் சோடிப்பெண்கள் ஆக்கினிமூலை கோளிகம் கனவு கன்றுகாலிவழக்கு

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பொய்யலபுகன்றவார்த்தை போகிறவிஷயம்வெற்றி
தையலும்பெருவாள்பெண்ணே தடையிலையானும்பின்னும்
செய்திடில்வர்த்தகந்தான் செட்டுடன்லாபங்கூடும்
கையினற்பெரியவேலை காட்டுபோர்மாதத்துள்ளே. (1)

கொண்டதோர்குறிப்புத்தானுங் கூறுவேன்கேளுமின்னம்
முண்டதோர்பொருளுஞ்சீவ னுயிரிலதாவரந்தான்
கண்டனமொழியாள்சோக் கனவுகண்டயருமேமே
லண்டையிற்பல்லியொன்றிங்காற்றலாற்சுகமுண்டாமே. (2)

உன்னியவகையினாலு முத்தமபெண்ணினாலும்
இந்நிலமதனிற்செல்வ மியல்புடன்சேருமென்றார்
முன்னமேநாற்காற்சீவன் முடக்கமென்றுரைக்கிலன்றே
சென்றமாமணியுஞ்சேருந் திரமிதுவருதியம்மா (3)

நட்டமுண்டுகொஞ்ச நாளைக்குமுன்னேசெய்த
துட்டநற்செய்கையாவுந் தொலைந்திடும்சிந்தைதன்னில்
இட்டமாம்பெண்ணுக்தெற்கே யிருந்துன்பால்வருவாளேகை
விட்டதோர்பொருளுஞ்சேரும் மேன்மையுங்கிட்டுமன்றே. (4)

கரியமாலருளாலெல்லாக் காரியங்களுங்கைகூடும்
ப்ரியுகைத்தேரும்யோகம் பாரினிலமையுந்தாரார்
புரவலராலேசெய்கள் பொருந்திடும்புனிதவாய்சங்
கரன்றனக்குறியநேர்த்தி கடனென்றுபாக்கியாமே. (5)

சார்ந்திடும்புதையல்வேண கசலவைபோகங்கிட்டும்
ஆர்ந்திடுமனைக்குப்பேயன் றறைவர்களிதைநம்பொன்னு
தோர்ந்தகண்ணுளியாலே தீர்ந்திடுவனப்பினாலே
வார்ந்தவோர்சிறுமிக்கேற்ற மருமகன்வருவான்மாதோ. (6)

---

நான்காம்வீடாகிய

## கடகராசி உதயமானால்

### வசனம்

கடகராசியென்பது பெண்ராசி. நண்டு தண்ணீருக்குள் திரியக்கூடியது. போனபொருள் வருமோ வராதோவென்று நினைத்துக் கேட்டது. வந்துவிடும். தாமதத்தில் கிடைக்கும். பயப்படவேண்டாம். சோரம் மான்பிறைவடிவம் அச்சகனு. சிக்கு, துன்பம், நஷ்டம், பயம் பிரசவவேதனை அபாயம் மத்திபம்.

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

திங்கள்மும்மாரிபெய்யுந் திருவளர்சென்னலோங்கும்
எங்குமேபலிக்குங்கீர்த்தி யிப்பவேவியாதிதீரும்
செங்கையிற்குழவியுண்டாஞ் செல்வழிசெயமேயாகும்
பொங்கியபொருளுஞ்சேரும் பொருந்தியகடகந்தானே. (1)

வேண்டியகுறிப்புத்தானும் விரும்பியபொருளுஞ்சேரும்
ஆண்டவனுதவியாலே அகலமாம்மனையுஞ்சேரும்
பூண்டதோர்பணிதிதானும் போனதுமோசங்கானும்
மாண்டதோர் தெய்வந்தன்னை மகிழ்வுடன்பூசிப்பாயே. (2)

ஆச்சுதுபேச்சினாலும் மருந்திட்டுமுறைப்பாட்டாலும்
மாச்சரியத்தினாலோ வந்ததோர்குறையிப்போது
போச்சுதுமனையாளுக்கு பொருந்தியபிணியுந்தீரும்
நீச்சினாற்கெடுதிவந்து நேரிடும்விலகிப்போமே (3)

முந்தியதெய்வத்தாலே மூண்டதோர்குற்றத்தால்முச்
சந்திவீரப்பனுக்குச் சரியானபூசைபோட்டால்
சிந்தனையாவுந்தீருந் திரமதாய்த்திட்டிவைத்து
சிந்தனையாவுந்தீர்ந்து நிலைபெறவளருவாயே. (4)

மன்னனால்வந்ததுக்கம் மனுஷனால்மறைந்துபோகும்
முன்னமேசெய்ததோஷம் மூண்டதுந்துலைந்துபோகும்
அன்னவன்பூமிரெம்ப அருமையாயுந்தனுக்கு
என்னவேகொடுப்பான்கொண்டிவ் விருநிலம்வாழ்குவாயே (5)

செய்மனைசுற்றமோடுஞ் சென்றிடவயலூர்வைக்கும்
தாய்தனக்காகுமாகா தந்தைக்குக்கருமந்தானே
பேய்முலைப்பாலையுண்டான் பேசருமலைக்குநீயும்
போய்த்திரியெடுக்கிலெல்லாப் போகமுங்கூடுமன்றே.

---

ஐந்தாம் வீடாகிய

## சிங்காரசி உதயமானால்.

வசனம்

சிங்காரசியென்பது ஆண் ஒரு காரியத்திற்கு போகவேணுமென்று நினைத்தாய் அதுமானிடசேவனைக்கோரிக்கேட்டாய் சீக்கிரம்முடியும் விடுகட்டல் வழக்கு வெல்லும் துன்பம் நீங்கும் ஆண் பிறக்கும், எடுத்த காரியம்செயம் தேவதையைக் கும்பிடநலம்,

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பூமியும்வட்டகைவாங்கப் புகுந்திடும்பொருந்துங்கீர்த்தி
யாமிதுசாதமாகும் ஆனதோர்கஷ்டஞ்சேரா
காமியாங்கேட்டவெல்லாக் காரியங்களுநற்சித்தி
வாமிபெயுடத்திற்கொண்ட வரனருளருளினாலே (1)

சிங்கம்வந்துதித்தாலே தேடியபொருளுஞ்சேரும்
பொங்கமாய்க்கனவுகண்டு பூரித்ததுபோலாகும்
திங்களிரைந்துஞ்சென்றாற் சிறப்புடன்வாழ்வுமிக்காம்
மங்களவார்த்தையின்றே மகிமையாய்க்கேட்டுய்வாயே (2)

ஏற்கவேசெய்ததோச மியல்புடன்தீர்ந்துபோகும்
மார்க்கமாயுனக்குவந்த வயிற்றுநல்வலியுமேகும்
சேர்க்கையாய்க்குடும்பத்தோடே சேதுவின்தானமாட
பார்க்கருநிதியில்மேலாம் பண்புடன்வாழ்குவாயே. (3)

வந்ததுசிங்கராசி மாதமும்மாரிபெய்யும்
தந்தநுன்குடும்பத்திற்கு தைரியமிகவுண்டாச்சு
சந்ததிகிளைகளோடு சங்கரன்பொங்கல்போட்டால்
செந்திருவளரும்வாக்குச் சீர்தருஞ்செழிப்புண்டாமே (4)

வந்திடும்ஞானம்வீரா வருத்தங்கள்வழங்குமானச்
சுந்தரஇலமுந்துண்டாய்த் துலக்கிடும்தாரம்போன
மைந்தனும்வருவன்ஒற்றை மாட்டினல்யோகமுண்டாம்
செந்திருமேவிவாழ தினமுநற்குணமுண்டாமே (5)

சற்சனர்நேசஞ்சாருஞ் சுமர்த்தனும்பேரைப்பூண்பாய்
விற்பனனொருவன்கூடில் மேலிடிலாபமுண்டாம்
கற்பினிலுயர்ந்தாள்நின்றன் கடிமனையாகுங்கண்டாய்
பற்பலவழியில்யோகம் பலித்திடும்நலித்திடாதே (6)

---

ஆறும் வீடாகிய

## கன்னியாராசி உதயமானல்.

வசனம்:

கன்னியாராசியானது பெண் கோரிவந்தது பெருகாலசமயம் மயக்கமாயிருக்கிறது பெண்பிறக்கும் அஞ்சாதே தாமதப்படும் சத்த கன்னிகள் பேச்சி இருளாயி ராக்கு தென்மேற்கு திசைபோனவருடனே வருவார் செயம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்,

உன்னியகருமம்நன்றும் ஒண்டொடிப்பிள்ளைநோயாம்
மின்னலுமழையுமுண்டு வேந்தராற்றக்கயோகம்
கன்னிக்குமணமும் கூடுங்காட்டிலிற்சென்றார்மீள்வர்

பன்னியயயிரும்வாய்க்கும் பலன்கன்னிராசிக்காமே (1)
கன்னியில்வந்துநின்று.காரியம் வினவிவந்தாய்
நன்னியமத்தினுலோர் நனிபொருளடைகுவாயால்
அன்னியராலேதுன்ப மணுகியக்கணமேயோடும்.

என்னமோசொன்னேன்வேத னெழுதியவிதியிதாமே (2)
கிடந்ததோர்பொருளினாலே கிலேசங்கள்மெத்தவுண்டு
படர்ந்தவக்கிலேசம்யாவும் பரிதிமுன்பனிபோலோடும்
நடத்திடுமினிமேலாக லாபமும்வாக்குந்தானே.

இடந்தனிற்றேடிவந்து மீய்குவர்பொன்னேயம்மா (3)
முன்னமேயிருகாற்சீவன் மோசத்திலாழ்ந்ததென்ன
சொன்னதுபொய்யாஅல்ல சுகமுடன்குலதெய்வந்தான்
இன்னிலமறியவுந்த னில்லத்திலிருந்தேகாக்கும்

மன்னியகடவுளெங்கும் வதிவரென்றறிகுவாயே. (4)
ஆதிபுன்குலதெய்வத்தை அனுசரிக்காததாலே
மேதினிதனிலேதுன்பம் விளைந்ததுவிலகும்நாலு
வேதங்கள்பிறந்தவன்றே பிதியிந்தநூலைச்சொற்முன்

ஆகலாலிதையுமுண்மை யாகவேஉட்கொள்வாயே. (5)
என்வடிவேலன்பேரை யிட்டனன்குழந்தைக்காக
மீன்வந்துபிடிக்கக்கண்ட வியனகன்வதனுல்நட்டம்
தேன்வியாபாரனன்றுய்ச் சித்திக்குஞ்சிரமமில்லை
மான்விழியாதர்யோகம் வாய்த்திடுமுண்மையாமே. (6)

ஏழாம்வீடாகிய

## துலாம்ராசி உதயமானல்

வசனம்.

துலாம்ராசியென்பது சட்டி திராசு கனவு மிச்சமில்லை கோரின காரியம் மத்திபமாய் முடியும் அன்னியில் சோரம் கலகம் என்று அறியவும் திக்கு மேற்கு போனவர் தாமதித்து வருவார் மழை பெய்யும்

## கவி.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மழைபதுமெத்தவுண்டு மார்க்கமாய்ப்போனோர்மீள்வார்
பிழையதுவாராதென்றே பேசியபடியேயாகும்
பழையதோருறவுசேரும் பத்தொருநாளைக்கப்பாற்
குழையதையிழந்தாய்வாரா குருபத்தியுடையோனாமே. (1)

உற்றதோர்பெண்ணினாலே உயிர்க்கொருசுகமேயில்லை
கற்றநற்கலையில்வித்வான் கருதுமுன்சென்மஞ்செய்த
குற்றமேயாகுமுந்தன் குலதெய்வந்தனக்குப்பூசை
பற்றுடன்கொடுப்பாயானால் பாவமும்விலகுமன்றே. (2)

ஆனதோர்பொருளில்காச மாகுமத்தன்மைக்காக
கானவில்சேதுயாத்திரை நயமுடன்செய்யிற்றீரும்
ஊனமாய்ப்போனகைகா லுடனுடன்சௌக்கியமாகும்
மானகர்பெண்ணால்யோகம் வருகுமென்றுரைக்கலாமே (3)

தாங்கியபகையினாலே சகலமும்நலமேயாச்சு
ஓங்கியபகையுந்தீரு முறவினர்வந்து சேர்வார்
ஏங்கியகுழந்தைதானு மியல்புடன்சுகமாய்வாழும்
தீங்கதுவிலகியோடுஞ் செகமதிற்சகசமாமே. (4)

கொண்டதோர்மனைவிதன்னைக் கூறியகுறையினாலே
எண்டிசையறியநீங்கிக் கெய்தியதெய்வமுன்னி
கொண்டேனலவாயிற் குறகிநம்சொக்கேசர்க்கும்
கண்டுநேர்மொழிமீனம்பி கைக்கபிஷேகஞ்செய்யே. (5)

கூட்டினாற்பலனேகிட்டுங் குறுநிநோய்கைகால்முக்கு
நாட்டகிற்கண்டேபின்னால் நயந்தரும்பயங்கொள்ளாதே
சாட்டியதொலையுங்கையிற் சார்ந்திடுஞ்சண்டைசாரா
வாட்டங்களிலைமைந்தா மயங்கவேவேண்டாம்சொன்னேன். ()

---

எட்டாம் வீடாகிய

## விருச்சிக ராசி உதயமானால்.

வசனம்,

விருச்சிக மென்பது தேள் ஊர்ந்து திரியக்கூடியது அலல் விஷந் தங்கி யிருக்கிறது. அதமா முடியும். பின்வீடு நன்மை கிடைக்கும். திடம்; உறுதி, சீவன், சேத்திர மென்றும் சொல்லலாம். மேற்குத் திசை சகடு தேர் நலம்.

கவி

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஊக்கமாய்விருட்சிகந்தா னுனக்கதுபின்னுமாச்சே
ஆக்கமுண்டாகும்நன்மை யடைந்திடுதுயரந்தீரும்
பாக்கியமெழுத்துமுண்டாம் பற்பலதுயரம்நீங்கி
யோக்கியனுவானென்றே உனக்குமுன்அரைசெய்தேனே (1)

உதித்ததோர்விருச்சிகத்தா னுசிதமாம் பிழைப்புமுண்டு
விதித்தவுன்குலத்திலோர்பெண் மேவிடும்பூரணையுள்
மதித்ததோர்செட்டுலாபம் வருமொருவாரத்துள்ளே
கதித்ததோர்சேவகத்தின் கனமதையறிந்துபாரே. (2)

கன்னகல்ஞாலந்தன்னிற் கனதையும்பொருளுஞ்சேரும்
விண்ணவரருளுமுண்டே மிளிர்மணிவகைவியாபாரம்
பண்ணிடில்பலிக்கும்மேலாம் பதவியுமுதவியும்பற்பல
புண்ணியவான்கள்நேசம் பொருந்திடுமறிகுவாயே. (3)

இறையவனருளினாலே யிசைந்திடும்பாக்கியமெல்லாம்
குறைவறப்பயிர்கள்செய்யில் கூடியேவிளையுமேலாம்
மறையவர்பகைமைவேண்டாம் மற்றொருவகையினாலே
நிறைபெரும்பகையும்வெல்லும் நினைத்தகாரியமுநன்றே. (4)

இல்லதிலோர்பாவாடை யேந்திழையலருகின்றாள்
நல்லதிங்கிவளையுன்றன் வைதவிற்குலதெய்வந்தான்
வெல்லுதேயின்னம்வேண்டும் விதமொருச்சொல்லுவாயால்
வல்லதோகாரியங்கள் வழக்குகள்செயமேயாமே. (5)

ஓங்கியநன்மைசேரும் உறவினர்வரவைக்காண்பாய்
தீங்கிலாதயலூர்செட்டுச் சேர்ந்திடுந்தவறுதப்பா
பாங்குடன்சினேகராவார் பகைவருநகைமேற்கொண்டு
நீங்கினூர்வருவார்வந்தால் நிச்சயம்பொருளீய்வாரே. (6)

---

ஒன்பதாம் வீடாகிய

## தனுசு ராசி உதயமானால்

வசனம்,

தனுராசி ஆண் வியாழன் மறையோன் வில்வடிவம் வடமேற்கு திக்கு ஆகையால் மானிடனுக்கு வந்த சிக்குத்தீரும் ஆண்குழந்தை பிறக்கும் பூமி பலிக்கும் தூரம் போனூர் வருவார் சுபவார்த்தை கிடைக்கும்

### கவி

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

அகமதிற்கவலைவேண்டா மப்பனேசிலநாளாக
சுகமதிங்கிலைகண்டாயே சூழ்வினைசூழ்ந்தேதீரும்
புகழதுபெறுவாய்நீசப் புலையனூற்றீங்குநேரும்
நகமதில்வாழ்வுசின்னாள் நடத்திடுங்கடந்திடாயே; (1)

குருவிசுவாசியாவாய் குவலயக்கோதைமாரின்
ராறிருவழகினுக்கொய்யதே [illegible]ணுய்ச்செயந்தீர்க்காயுள்
பொருணலமிகவேபெற்று புத்ரவுற்பத்திகிட்டும்
ஒருதனியாள்வலானுக் குகந்தநற்றந்தைவாக்கே. (2)

நீடியகாலமாக நினைக்கவேயில்லைதெய்வம்
ஆடியைக்கனவிற்கண்டா யத்தனனருளுண்டாகும்
தேடியபொருளில்மிச்சச் செலவுகளாகுமுன்னை
நாடியேயொருவன்மூன்று நாளையில்வருவான்காணே. (3)

வம்புகள்வாராதப்பா மக்களைப்பெறுவாய்சீத
அப்புயக்கிழத்திவீட்டி லமருவள்அணங்கினாலே
வெம்பகைநேருந்தீரும் விரிஞ்சகன்மாலுங்காணுக்
கம்பனைசடிலன்பாதங் கடிதினிலருச்சிப்பாயே. (4)

செப்பியகாரியந்தான் றிரமதாய்ச்செவ்வாயாறில்
ஒப்புடனிருப்பதாலே உதவிகளாகமாட்டா
தப்பிலாநன்மையாகுந் தாழ்விலேகுமரருண்டாம்
எப்பவுங்கீர்த்திமாறு திருக்திடப்பொருந்துமாதோ. (5)

சேர்ந்திடுதனுசுதானுந் தீர்க்கமாயுதித்ததாலே
நேர்ந்திடுமெதிரிநாசம் நிலையிலேபொருந்திவாழும்
ஆர்ந்திடும்பெரியோரான அய்யரால்லாபமுண்டு
தீர்ந்திடுந்துன்பமெல்லாம் திறமதாயறிகுவாயே. (6)

---

பத்தாம் வீடாகிய

## மகர ராசி உதயமானால்

மகர ராசி யென்பது சுருமீன அழுக்குநிறம் சனிபார்சியாகையா ல் கருப்பு இரட்டைவடிவம் போனவர் தாமதித்து வருவார் குழந்தை தாமதித்து பிறக்கும் பிசாசு கோட்டாலே கண்ணுளியால் தீரும் வயி ற்றுவலி சுகமாகும் தேவதையை தெரிசிக்கலாம் தாமதத்தில் முடியும்.

### கவி.

அறுசீர்க்கழி நெடிலடிலாசிரிய விருத்தம்

பத்தியாய்மகரம்வந்து பாங்குடனுதித்ததாலே
எத்திசையறியராகு மியல்பதாய்உச்சமேற
தத்தியசோகந்தீருஞ் சகலநன்மையுமுண்டாகும்
சித்தியாய்சகலமுந்தான் சிறுமையுமணுகிடாதே. (1)

சொன்னதோர்கருமமெல்லாஞ் சுருக்கினில்முடியுமப்பா
மன்னவன்புகழ்வதாலே வந்திடுஞ்செல்வமெல்லாம்
மின்னியமழையுமுண்டு வீடுதான்கட்டல்வாங்கல்
கன்னிகைகொள்ளஇன்னங் காரியமெல்லாநன்றே. (2)

அடங்கவேமகரமான தய்யவிங்குதித்ததாலே
தொடங்கினவழக்குவெல்லுஞ் சுருக்கினில்சூதுவெல்லும்
தடங்குளமேறிவெட்ட சாலவுநன்றேதந்தம்
இடங்களில்மறைவலோர்க்கே யீய்குவாய்தானந்தானே. (3)

அடுத்துமிவ்வுலகிலுள்ளே ரனைவர்க்குமுதவியாக
எடுத்ததோர்கருமம்நன்று மீஸ்வரியருளினாலே
தொடுத்தநல்மாலைபூணுந் துணிந்ததால்வழக்குவெல்லும்
படுத்தசெம்மாடுமீளும் பாலனைப்பெறுவாய்மாதோ. (4)

பற்றுறநடந்ததெல்லாம் பாரினில்நலமேயாகும்
வெற்றியாய்ச்சொந்தந்தன்னில் விவாகமுஞ்செய்யநன்று
குற்றமேயுள்ளான்நேசங் கூடிடுமுடனேநீங்கும்
நற்றவம்பலிக்குஞ்செட்டி லாபமுமுண்டாமாதோ. (5)

திருடர்களாலேகொஞ்சஞ் சிரமமுமுண்டாம்நீங்கும்
இருடிகள்பாதபூசை யெய்திடுமினிமேலாக
தரமிகுமனிதர்சேர்க்கை தன்னிலேலாபங்கிட்டும்
கருடவாகனகோபாலன் காத்திடுங்குடியையுமாதோ. (6)

———

பதினோராம் வீடாகிய

## கும்பராசி உதயமானால்.

வசனம்.

கும்பராசி யென்பது வட்டவடிவம் குடம் வீட்டில் உபயோகிக்கக்கூடிய பாத்திரத்தில் குலதெய்வம் 21 பந்தி தெய்வம், பொன்சிக்கு சவுக்கியம் கனவினால் மயக்கம் சோரம் வீடுவாங்கல் பயிர் செய்தல் மாடு கொள்ளல் உத்தமம்.

விருத்தம்.

சாதனையாகவேயித்தரணியில் வாழ்வோர்நின்றன்
போதனைக்குள்ளேயாவர் புனிதங்கிஞ்சித்துமில்லை
வாதனைப்படவேவேண்டாம் வருவதுதானேசேரும்
நீதியாய்நினைத்ததெல்லா நிமிஷங்கைகூடுந்தானே. (1)

திருந்தியவயல்கள்வாங்குந் திறம்வரும்பதறுதப்பா
முருந்தனநகையார்தங்கள் மோகம்நாளுக்குநாளாய்
வருமதனாலேகொஞ்சம் வறட்டிடும்பொருளையப்பா
விருந்ததுவந்துதோன்றும் விக்கினம்வாராதன்றே. (2)

சாசத்தையலர்களின்பஞ் சார்ந்திடுந்தகமைசேர்ந்த
விரதநற்சோமவாரம் விட்டிடாதியற்றுவாயேல்
பரசுவருளகிலுள்ளோர் பைந்தமிழ்வலவனுவாய்
இரசிதச்சபையிலாடு மீசனாருளுண்டாமே. (3)

வீட்டினிற்குலதெய்வத்தை விரும்பியேபணியவில்லை
நாட்டினிலுனக்குநஞ்சை நன்மையாய்விளைவுகொஞ்சம்
சீட்டினிலாபமட்டே சிவனடியாரைக்காண்பாய்
காட்டினில்வாசஞ்சில்நாட் கழிப்பதால் கீர்த்திதானே. (4)

மகன்றனக்குரியசீக்கு மாறிடுஞ்சாய்ந்தவில்வம்
நகமெனக்கட்டநேரும் கானிலமறியத்தக்க
மகமுதலானவேள்வி வகையெல்லாம்புரிவாய்மைந்தா
சகமுதலெல்லாமீன்ற தற்பரனருளாற்றானே. (5

சஞ்சலமகலும்நின்றன் றனயனுக்குரியசீக்கும்
மிஞ்சிடாதிரண்டுநாளில் மிகுசுகமாகிவாழ்வான்
பஞ்சமதில்லைகண்டாய் பாவிகளழிவர்நீயும்
அஞ்சவேவேண்டாமின்னு மனைகலாபமுமுண்டாமே. )

---

பனிரெண்டாம் வீடாகிய

## மீனராசி உதயமானால்

வசனம்

மீனராசியென்பது மச்சவடிவம் தண்ணீரில் திரியக்கூடியது பொன்னிறம். வேதியன்வீடு. அரட்டியுண்டு. ஈசான்யதிக்கு போனவர்வருவர் மங்களம் நடக்கும் பெண்ருதுவாகும். பெண்கொள்ளல் கொடுத்தல் உத்தமம்.

இந்தநல்லிலக்கனத்தின்செய்கை யின்பமாய்ப்போட்டுவந்த
சொந்தமாம்சீட்டுத்தானுஞ் சுருக்கினில்பிரேசுகானும்
விந்தையென்றுரைப்போம்நீமுன் வேதியர்குலத்தில்வந்த
சுந்தரத்தோகையாலெத் தொடர்ந்ததிச்செனமம்மாதோ. (1)

வல்வினையாவும்போகும் மனமுவப்படைவாயின்று
சொல்லருமணம்நேர்வார்த்தை தோன்றிடும்கேட்பாய்வாசம்
மல்கியகுழலாளோர்பெண் வருகுவள்நகையினோடே
செல்வமும் பெருகும்மேலாஞ் சிறப்பையுமடைவாயப்பா. (2)

புக்கிடமிருந்துரெம்பப் பொருளுமேசேரும்பாலை
கக்கியபாலன்பாலை கனிவுடனருந்திவாழ்வான்
சக்கரனபனுமாலுந் தனித்தனிதேடிக்காணு
அக்கரவணிசர்வேச னடியிணையருளினாலே. (3)

வாதியைவெல்வாய்முத்து வர்த்தகம்பலித்துக்கொஞ்சம்
மீதியதாகுஞ்சின்ன வீடொன்றுகட்டநேரும்
பூதியாயொருபெண்ணுன்றன் புணைநலங்கவாவள்மூல
ஆதியெம்பகவான்செய்யு மருவினைபாட்டன்றெண்ணெ. (4)

கந்தன்றன்னருளுமுண்டாங் கரியவோர்சினேகனாலே
சொந்தநற்பொருளுஞ்சேரும் துறவியால்வெறுக்கநேரும்
மந்திரம்வருமுன்னாளில் வாழ்ந்தநின்பாட்டன்மாரால்
வந்தவோரில்லைவிற்பாய் மகிமையுமுண்டாமம்மா. (5

சாகரம்போகவைக்குந் தமிழினிற்சுவையைக்காட்டும்
மேகமாமணியும்காண விளக்குகள்கோவிற்கட்ட
லாகும்பின்னவரால்சொத்து அழியவேமாட்டாதப்பா
யோகியராலேசெல்வ முணக்குமேகிடைக்கும் அன்றே. (6)

முத்துக் குறி பார்க்கிற
பன்னிரண்டுராசிப் பலன் முற்றிற்று

---

## பேயோட்டுகிறது.

தேவிதிரும்பு திரிபுரையாளெந்திரியே
மாதுதிரும்பாயா மங்கையிடஞ்சென்ற மணவாளன் றேன்றலைபா
மாதைத்தொடர்ந்தவனை இஃனென்னவே வாக்கருளவேண்டுமம்மா
நாலாந்தலமாங் கோபுரத்தைக்காத்த நல்லமுனியையாநீ
கோபுரத்தைக்காத்த பாரச்சடையே கொத்தளத்துமாமுனியே

பெண்ணாள்மயங்குகிறாள் அவள்வருத்தந்தீர பிரசன்னமாகவந்து
கண்ணாலேநீபார்த்து மனவருத்தந்தீரக் கருணையுடனேயிரங்கி
கன்னியைத்தொடர்ந்த காரணத்தடைவாக்கருள்வாய்
காசிராஜன்பெற்ற கண்மணியேவீரயனே
மாதைத்தொடர்ந்த வல்லவாசொல்லேநீ
சங்கரன் திரும்பாயா மாடைதத்தொடர்ந்த சமர்த்தனெங்க சங்கிலியே
போதைமயக்கமா மாதைத்தொடர்ந்த பொன்கருப்பேவாவேநீ
தண்ணீர்மயக்கமா தங்கையைந்தொடர்ந்த சமர்த்தன்வெளியேராயா
கெந்துகால்நொண்டி கிடந்துருளும்சப்பாணி
வாதக்கால்நொண்டி வல்லவாசப்பாணி
மாதைத்தொடர்ந்து வகைசொல்வதற்காக வந்திரங்கு ஆணிமுத்தே
கம்பைநதியாள் காமாட்சிவாசல் காத்தபிரதானி
வம்பனுஞ்சோணைமுத்து இந்தமங்கையைநீகண்பார்த்து
கன்னியைத்தெடார்ந்த கட்டழகாசோணைமுத்தே
ஆதிநிலையும் அடியேன்றனக்கு அருள்புரியவேணுமையா
மட்டப்சிசுவில் இந்த மங்கைவிளையாடையிலே
மாடெதிர்த்துப்பாய்ந்த இந்தமங்கைபயந்ததினால்
மாதுபயந்தாள் மாமுனியுந்தான்தொடர்ந்தார்
தொடர்ந்தவழியிப்போ தோன்றவில்லையெந்தனுக்கு
பருவமுந்தானாகி பக்குவமுந்தானாகிப் பயிரிற்பலனில்லாதபடி
மாதுமலடாக வைத்திருக்குங் காரணமேன்
என்னவிதமென்று தேவியிடத்தி விதுவிபரங்கேட்பமென்று
அம்பிகைமீனாட்சியென்னைப்பெற்ற அம்மைகாமாட்சியரே
உன்னுடையகோவிலிலே அடிமைவந்து உட்கார்ந்திருக்குதம்மா
மங்கையைக்கண்பார்த்து அவளைப்பிடித்த மாற்றானையோட்டிவிடு
கண்பார்த்தருள்புரியும் யெனைப்பெற்றதேவி காத்துரச்சித்திடுவாய்
கண்மாய்க்கரையும் கரையில்புளியடியும்
ஆலமரமும் அழகான தோப்புகளும்
விட்டுவெளியா உனக்குவேண்டியதோர் சாமான்கள்
கொண்டுவந்துநான்தாரேன் குழந்தைமயங்காதே
சாமிதிருப்பு என்னையாண்ட தங்கம் வெளியேறாயோ

சமத்தனிறங்காயோ மயானத்தைக்காத்த சாமிதிரும்பாயோ
எதிரிமறித்தானே வரப்பாதையில்லாது இண்டுமுள்ளுபோட்டானே
மாத்தான்மறித்தானே எனையாண்டமுத்தா வழிபறிகள்செய்தானே
குழந்தைவருந்துவது உன்கொடுமுடிக்குக்கேட்கிலையோ
பாலன்வருந்துவது ருத்திரகளப்பூமி பார்முழுதுங்கேட்கிலையோ
பம்பைமுழங்குதடி பாப்பாத்தியெந்திரியே
சம்பையைவிட்டு முத்தாரக்கு சுதறிவெளிவாராயோ
மாணிக்கக்கொண்டை மடியில்பிரளலையே
சம்பங்கிக்கூந்தலே முத்தாரக்கு தலையையவிழ்த்துவிடு
மல்லிகைமுல்லை மலர்ந்தயிருவாட்சி மலர்சூடுங்கூந்தலினால்
ஆடத்தெரியாமல் அறிவுகெட்டாபோனாய்நீ
சுத்தத்தெரியாமல் சுணைகெட்டாபோனாய்நீ
இடமும்வலமும் இருபுறமும்சுத்தவில்லை
மாலைகுலுங்க மயிரவிழ்த்தாடவில்லை
சதம்பமணக்கவில்லை இன்னமும்பூமியிற்கைபோடக்காணவில்லை
எட்டிப்பிடிக்கவில்லை இருபுறமுஞ்சுத்தவில்லை
தொட்டால்விடாத தொட்டியப்பிசாசோநீ
கட்டயிலுங்கட்டை இதுபெரியகருவேலங்கட்டையடா
தேரோ அலங்காரம் இன்றைக்குத்தெருவெல்லாஞ்சிங்காரம்
பச்சையிலுப்பைவெட்டி பஞ்சவர்ணப்பல்லாக்கில்
ஏத்திவிடுவேன் இதுதெரியமாட்டாதா
தலையைவிரிக்கலையா சற்றுநேரமாடாயா
வீசத்தெரியலையா விளையாடமாட்டாயா
சுத்தத்தெரியலையா சுணைகெட்டாபோனாய்நீ
மட்டஞ்சிறுசு மதலைப்பிராயமடா
கெஞ்சம்வயது குலுங்கும்பிராயமடா
காயாமரமிதுடா காயில்லாப்பூமரமாம்
மாதிடத்திற்சென்ற மன்னவா செஞ்சடையே
பாண்டிவளநாடு பழமதுரைநன்னாடு
தண்ணீர்க்கரைக்குத் தங்கம்வரும்வேளையிலே
செட்டியப்பெண்ணென்று தேடிச்சிறையெடுத்தாய்
பாப்பாரப்பெண்ணென்று பார்த்துச்சிறையெடுத்தாய்
கம்மாளப்பெண்ணென்று கருதிச்சிறையெடுத்தாய்
அகம்படியப்பெண்ணென்று அறிந்துசிறையெடுத்தாய்
மிராட்டியப்பெண்ணென்று வேண்டிச்சிறையெடுத்தாய்
எத்தனைநாள்கத்தவது இறங்கலையா செஞ்சடையே
காணக்கிடைக்கவில்லை கண்ணுக்குத்தோணவில்லை
இல்லாததநாடு இருட்டுநாடாகுதடா
இடுப்பைபொடிக்கலையே இருபுரமுஞ்சுத்தவியே

மாதுதலைவிரித்து மனம்போலஆடவியே
அஞ்சுசடைகொஞ்சிவர அழகுசடைமார்புரள
கொஞ்சுசடைபின்னலிட நீகோலாகலமாக
சுத்திவிளையாடேஉன்பம்பைவிரித்துஜோக்காகஆடாயோ
வந்திட்டான்வந்திட்டான் இந்தச்சமயம் மார்நாட்டுப்பொன்கருப்பு
இனிமேல்மயக்கமில்லை எனக்குவருத்தமில்லை
மதிமயங்கிடாமல்எந்தனுக்குரியும் வார்த்தையொன்றுசொல்லிவிடு
மனதிலொன்றுமெண்ணுமல் வார்த்தையொன்றுசொல்லிவிடு
புத்திமயங்காதே போகாதேநீதானும்
சத்தியமாகத் தான்சொல்லுவோர்வசனம்
வார்த்தைரெண்டுசொன்னுல் வம்புதும்புஞ்செய்வில்லை
பார்த்துஆலோசித்துப் பகருவாயோர்வசனம்

---

## பேய்பிடித்த பெண்பேரில் ஆவேசம்
## வந்து சொல்லுதல்.



இருந்தேனென்னைவிரட்டயென்னை நினைத்தாய்பயலே
பெண்ணைவிட்டுநானகலேன் வேண்டியதோர்பிரட்டுருட்டுசெய்தாலும்
இவளைப்பிரியஇந்தவருஷத்தி லெனக்குமனதில்லையடா
யாரென்றுநீநினைத்தாய் சக்கிலியன்பெற்றஅருமையுள்ளபாலனல்லோ
வன்கொலையால்மாண்டு இந்தமாதைத்தொடர்ந்தவன்யான்
எந்தவூர்நீர்சொல்லென்று யென்னைமறுத்துக்கேட்டாய்
ஊரின்பேரென்னவென்று என்னைநீஉண்மையுடன்கேட்பதினுல்
சொல்லுகிறேனிப்போஎனக்கு வேண்டுஞ்சாமான்துரைமகனேதந்தா
ஈடத்திவிடுகிறேன் ஆசானறிய நகரைவிட்டுப்போறேனிதோ [க்கால்
ஒன்பதுசீசாக்களும் ரொட்டிசாராயம்ஒழுங்காகக்கஞ்சாவும்
கூடைதேங்காய்பழம் எந்தனுக்குகொண்டுவந்துவைத்துபின்னும்
இருபத்தொருபணமும் எல்லைதனில்யியல்புடனேவைத்தாக்கால்
போறேனிதோவெனவே புன்சிரிப்புக்கொண்டுசொல்லும்
காடுசெடியும் கண்மாய்க் கரிசக்குளத்தருகே
ஆலமரமுஞ்சோடிரெண்டாக அருகேபுளிமரத்தில்
இருந்தேன்வெகுநாளாய் யேனென்றுந்தேடவில்லை
இந்தமங்கைதானும் அந்தவழியாகஇவள்வருகும்போதினிலே
அன்றேயோர்போடா யறையவெழுந்தேன்மதுரை
குன்றைநிகருமொட்டைக் கோபுரத்தான்மன்றுடி
வேண்டினதினுலுமுயிர் வேதனைசெய்யாதுவிட்டு
ஆண்டியிந்தமாதைத்தொடர்ந்தேனென்றமுதல்

பாப்பாரப்பெண்ணென்று பார்த்துப்பிடித்தேனுன்
மங்கையைவிட்டால் வழியொன்றுமில்லையடா
போறேன்போறேனெனவே நீபடுத்துந்துன்பம் பொருக்கமுடிகூடலியே
என்றுதான்சொன்னவுடன் அவள்கேட்டதெல்லாம் இயல்பாகவேகுவித்து
சூடனைவாங்கிவந்துபெண்ணுள்கையாலடித்துச்சொன்னளேபோறேனென
போறேன்போறேனெனவே இவளைவிட்டுப் போனனேசக்கிலியன்
இந்தமங்கைமேலே கனவிலும்யானும் இனிநினைக்கமாட்டேனென்று
முடிவாங்கிக்கொள்ளுமென்று முடிபிடித்துத்தான்கொடுத்து
போனதுபிசாசு அப்போதுமங்கை பொற்றாமரைமூழ்கி
மங்கைநல்லாள்தானும் மீனாட்சியம்மாளை மனதில்நினைத்துக்கொண்டு
போனளேவீடுதனிற் சந்தோஷமாகப் புருடனுடனேகலந்தாள்
சக்கிலியன்நீங்கினதாலதேமுழுச்சாய்த் தலைமகனைப் பெற்றெடுத்து
சுகசீவியாகவேதான் பதினாறுமக்கள்பெற்றுச் சுகமாகவாழ்ந்திருந்தாள்.

முற்றும்.

---

## திசைநான்கும் ஆரக்கட்டி வீபூதிகொடுக்கும் முறை.

[*]

### வடதிசை கட்டுதல்

மூலப்பொருளே முக்குணமேராசாங்க
வாலைக்கணபதியே வாக்கருளவேணுமையா
கானமயிலேறுங் கதிர்வடிவேல்நாயகமே
ஞானமுருகாகுமரா நாதாந்தப்பேரொளியே
இந்திரவிமானத்தி லிலங்கவேதானிருக்கும்
சுந்தரசொக்கையா துணைசெய்யவேணுமிங்கே
இவண்டாமறையாளே வெள்ளைநிறப்பூங்குயிலே
தண்டாமல்வானரிடம் தான்வாழும்தர்ப்பரையே
மாதுகௌரி மகமாயிராஜகன்னி
சாதுவேமாகாளித் தாயேபராபரியே
காளிபகவதியே காரணியேகாளிமுத்தே
ஏழைக்குகந்தவளே யிடறுகளைத்தீருமம்மா
வனப்பேச்சியுந்தன் மகனைநீகாத்திடுவாய்
க்ஷணப்பொழுதில்வந்து தற்காத்தருள்புரிவாய்
பாண்டிதுரைமகளே பாப்பாத்திவந்திடுவாய்
வேண்டும்வரந்தந்து மென்மேலுங்காத்திடுவாய்
வடதிசையைக்காத்த மாசானம்வந்திடுவாய்

திடமானசோணைமுத்துத் திருநீறுதந்திடுவாய்
மாசானகாளி மகமாயிவந்திடுவாய்
வடதிசையெல்லைகைவிட்டு வந்திடுவாய் காளிமுத்தே
காகம்பறவாமல் கம்பையைக்காத்திடுவாய்
முள்ளுமுறியாமல் முடித்தபூவாடாமல்
சாம்பல்கொடுப்பதுவுந் தவறுதகாருமையா
பூசைமயானத்தில் போட்டுமுடித்துவிட்டேன்
ஏதுகுறைகளிருந்தாலுந் தீர்த்திடுவாய்
கம்பையில்மோசங் கலக்கமதுவாராமல்
மாத்தானிருந்து வந்தகுறையானாலும்
தீராதநோவுமுதற் தீர்த்துசுகங்கொடுக்க
கண்ணேருநாவேரு கம்பையிலேதான்தீர்த்து
காலிதனக்குவந்த கடியவியாதிகளும்
இப்போதுதீர யெந்தனுக்குவாக்கருள்வாய்
நஞ்சைபுஞ்சைசேமமதாய் நல்லவிளைவுண்டாக
குறைவன்றிப்பிள்ளை குறிப்பாகத்தான்பிறக்க
ஏதுகுறைகளிருந்தாலுந் தீர்த்திடுவாய்.

---

## கீழ்திசை கட்டுதல்.

மாயிமகமாயி மணிமந்திரரூபியேநீ
தாயேதுரந்தரியே சங்கரியேவாக்கருள்வாய்
குருமுகூர்த்தமாயென் குறிமுகத்திற்றோன்றுமம்மா
அரிவுருத்துமானத் தையாயெழுந்திரியே
எல்லைகிழக்கே யிருந்துஅரசாச்சிசெய்யும்
காளிரணவீரி காரணியேவாக்கருள்வாய்
மின்னிரவிபற்றகர்த்து வெய்யசுரர்கையறுத்து
தன்னையிகழ்தக்கன் தலையறுத்துப்பின்னரயன்
வாள்விபுதரோடு பொன்னறமால்புரமிட்டோடவுந்தி
வேழ்விதனையழித்த வீரபத்திராவாக்கருள்வாய்
சின்னக்கருப்பா செரிந்தகரியமுகில்
வன்னக்கருப்பா மடைக்கருப்பாவாக்கருள்வாய்
சிவகங்கைப்பூமி சிறந்தவளநன்னாட்டில்
வளருங்கிருளாயி வந்தருளவேணுமம்மா
மாலைக்கழுத்தி மஞ்சணைமார்பழகி

வாலையதுள்ள மாத்திநல்லவாக்கருள்வாய்
கள்ளுடன்சாராயங் கலந்துகுடித்தேப்பமிட்டு
தள்ளாவூர்காக்குஞ் சமையலாளே வாக்கருள்வாய்
உன்னைத்தியானித்து உன்பாதந்தஞ்சமென்று
சாம்பல்கொடுத்தேன் தவறுதுகாருமையா
நாட்டுப்பிணியானாலும் நல்முடனேதான்தீர்த்து
சிங்கநல்லவாகனத்தில் சிறப்பாகத்தானேறி
நாலுதிசையும் நலமாகக்காவல்கொண்டு
பில்லிபேயானாலும் பிணியதுவேயானாலும்
கண்ணேறுவானாலுங் கலகங்களானாலும்
ஏவலதுவானாலு மிடஞ்சலதுவானாலும்
எல்லாநீதீர்த்து யென்தாயேநீகாத்து
சல்லாபமாகத் தானிருக்கச்செய்திடுவாய்
குற்றமில்லாமல் குழந்தையதுபிறக்கும்
முள்ளுமுறியாமல் முடித்தபூவாடாமல்
சொக்கினமாடு சுகமாயிருக்கவேதான்
அச்சந்திகிலு மதிரடியுஞ்சொர்ப்பனமும்
காச்சல்முதலான கலக்கமெல்லாந்தான்தீர
உன்னைத்தியானித்து உன்சாம்பலைக்கொடுத்தேன்
சாம்பல்தவறாமல் தர்க்காத்துக்கொள்ளுவையே.

---

## தென் திசை கட்டுதல்.

எல்லையின்தெற்கே இருந்துஅரசாக்ஷிசெய்யும்
வல்லிமகமாயி வாக்கருளவேணுமம்மா
பூங்காவனத்தருகே பூசித்தமாசானம்
பாங்காயெனக்கு பச்சமுடன்வாக்கருள்வாய்
உயர்வானயோசுகுண்டு ஒன்பதுகம்பளத்தில்
ஐயமாகஆடுகின்ற சக்கம்மாதேவியம்மா
நாலுதிசையும் நான்வணங்கியிப்போது
பாலன்மனதுகந்து பச்சமுடன்சாம்பல்தனை
கொடுத்தேன்மனதார குவலயத்தோர்தானறிய
சாம்பல்பழுது தான்வாராமற்காரும்
ஆதிகிழவன்சாம்பல் அம்மாதவறாதே

குருவாயெனக்குக் கொடுத்ததொருசாம்பலிது
கையால்கொடுத்தால் கன்மவினைதீர்ந்துவிடும்
தேவதைகளெல்லாந் திடமாகக்காவல்வைத்தேன்
உச்சமாகாளி உன்பாதந்தஞ்சமென்றேன்
சாம்பல்தவறுது தர்க்காத்துக்காருமம்மா
பிள்ளைமயங்காமல் பெருமையுடன்காப்பாற்றிப்
பாண்டித்துரைமகளே பார்வதியேவாக்கருள்வாய்
நாவுதவறுமல் நல்லோசைமங்காமல்
வாக்குத்தவறுமல் வந்துதவவேணுமம்மா
பாலன்வருந்துவது பச்சமுடன்கேழ்க்கலையா
குழந்தைவருந்துவது கொடுமுடிக்கிக்கேழ்க்கலையா
பாலன்கடன்தீர பார்வதியேவாக்கருள்வாய்
என்னவினையானு மிப்போதேதீர்த்திடுவாய்
கன்மவினையானாலும் கண்ணேறுவானாலும்
சொன்னபடிக்குச் சுகங்கொடுக்கவேணுமம்மா
இசைநான்குங்கட்டித் திறமாகக்காவல்வைத்தேன்
காவல்பதனங் காப்பாத்தவேணுமிப்போ
சுகமானதுங்கொடுத்து சுந்தரம்போல்காப்பாற்றி
காவல்புரியுங் கடனுனக்குஇப்போது
தென்திசையான ஸ்ரீவில்லிபுத்தூரில்
பெரியகுளங்கண்மாயில் பிரபலமாய்வீற்றிருக்கும்
சந்தனமாரித்தாயேஉன்காவலம்மா
மருதங்குடியில் வளர்கின்றஆவுடையாள்
பாதமதையும் பணிந்தேன்சிறியேன்நான்
காவலுன்காவல் காப்பாற்றவேணுமம்மா
தாய்வயிற்றிலேபிறந்த தமையன்பொன்னையாவும்
கம்பைதனிலிருந்து காவல்துபுரிந்து
ஏழையைக்காப்பாற்றி இரட்சிக்கவேணுமையா
பெற்றபிதாவான பெருமையுள்ளவென்னுசான்
நற்றவத்தாலென்னை நலமுடன்காப்பாற்றிவைத்த
கற்றவனேமால்ராம சாமியெனேக்காத்திடுவாய்.

---

## மேற்றிசை கட்டல்.

மேற்கெல்லைதன்னில் விளங்குகின்றமாசானம்
வாக்குதவஇச்சமயம் வந்திடுவாய்பொன்சுடலை

வனப்பேச்சியெந்தனுக்குவாக்குதவவேணுமம்மா
மயானத்தைகாத்தவளே வரந்தரவுவேணுமம்மா
ஆரியப்பூமாலைக் கருங்கழுவிலேறிநின்ற
பாரியகாத்தையா பரிவானவீரபத்திரா
ஆபத்தைத்தீர்த்த அருள்சேர்சடையாண்டி
பாபத்தைப்போக்கும் பராபரமேவாக்கருள்வாய்
தொட்டியத்துச்சின்னு துரைமகனேவீராசொல்
மட்டுக்கடங்காவரிப்புலியே வாக்கருள்வாய்
அட்டதிசையு மடியேன்மிகப்பணிந்தேன்
துட்டரைத்தான்செயித்த துரைமகனேவாக்கருள்வாய்
பாட்டன்மார்வைத்தாண்ட பச்சமுள்ளமுத்திருளே
காட்டிக்கொடுக்காதே கம்பையைக்காத்திடுவாய்
சாம்பல்கொடுத்தேன் தவறாமல்காருமிப்போ
இடஞ்சலதுசெய்யாம லென்னைநீகாருமம்மா
நான்குதிசையும் நான்காட்டிவைத்துவிட்டேன்
மாசானங்காத்த மணிச்சுடலையுன்காவல்
காத்துயிருக்குகின்ற கண்மணியேசோணைமுத்தே
சூனியங்களானாலுஞ் சோரங்களானாலும்
வஞ்சகங்களாலும் வல்பிணிநோயானாலும்
பஞ்சாய்ப்பறக்கடிக்க பாரிலுள்ளோர்தான்மதிக்க
சேனக்குதிரையின்மேல் சிறப்பாகத்தானேறி
நான்குதிசையும் நன்மையுடன்காவல்செய்து
சுத்திவந்துபார்த்து சுடலையைக்காவல்வைப்பாய்
நின்றென்குறிமுகத்தில் நேர்ந்துகுறிவைத்தவநீ
அன்றேநெருங்கி அருகினில்வாயென்குழந்தை
இந்தசபிடிசாம்பல் இனிமேல்மயங்காதே
சாம்பல்கொடுத்தேன் தவறாமல்காத்திடுவேன்
மயக்கமினிவேண்டாம் மகனேவருந்தாதே
எல்லாப்பிழையும் யென்மகனேயான்பொருத்தேன்
வாழிமிகவாழி மகமாயிவாழியதே.

## கோடாங்கிமாலை

## முற்றிற்று.



